KALKI
.12.2006 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

# சாந்தி நிலவ வேண்டும்!






அப்துல் கலாம் கனவும்...



...மணி ரத்னத்தின் குருவும்!



# கல்கி

31.12.2006

12

பல்லும் பார்வை தரும்!



24

பிறை நிலவும் முழு நிலவும்



36

மறக்க முடியுமா?



48

5,000 முதல் 5,00,000 வரை



02

கோட்டையில் பஞ்ச பாண்டவர்கள்!



படும் திடீர் சலசலப்புக்கு எத்தனையோ காரணங்கள் இருந்தாலும் முக்கியமாகச் சொல்லப்படுவது இதுதான்: வைகோ மீது ஏற்கெனவே கோபம்கொண்டிருந்த கலைஞர், டெல்லியில் முரசொலி மாறனின் சிலையை வைப்பதற்கு வைகோ எதிர்ப்பு தெரிவித்ததால் அதிகமாகவே சூடாகிவிட்டாராம்.

எல்.கணேசனும் செஞ்சி ராமச்சந்திரனும், தி.மு.க.வில் ஐக்கியமாவது(?) குறித்து மிகவும் கவலைப்பட்டுப் போயிருப்பவர்கள் தி.மு.க. மத்திய அமைச்சர்கள் பழனி மாணிக்கமும், வெங்கடபதியும் தானாம். "திராவிட இயக்கத்தில் மிகவும் சீனியர்களாக இருப்பதால் செஞ்சியாருக்கும் கணேசனுக்கும் அமைச்சராகும் வாய்ப்பு இருக்கிறது. தி.மு.க.வைச் சேர்ந்த இரு மத்திய ஜூனியர் அமைச்சர்களுக்கு ஆபத்து காத்திருக்கிறது" என்கிறார் ஒரு தி.மு.க பிரமுகர். இதற்கிடையில் தயாநிதி மாறன் மூலமாக எல்.கணேசன் செயல்பட்டதால், ஸ்டாலின் தரப்பு வருத்தத்தில் இருக்கிறதாம்.

# கோட்டையில் பஞ்ச பாண்டவர்கள்!

முனிர்ஹோடா, டி.ஆர்.ராமசாமி, ராஜமாணிக்கம், சண்முகநாதன், காசிவிஸ்வநாதன் ஆகிய ஐந்து அதிகாரிகள் முதல்வரின் செயலாளர்களாக இருக்கிறார்கள். முதல்வரிடம் செல்லும் கோப்பு இவர்களுள் ஒருவர் மூலமாகத்தான் செல்லும். "இந்தப் பஞ்சபாண்டவர்கள் நேரடியாகத் துறைத் தலைவர்களுடன் தொடர்பு கொண்டு சில முடிவுகளை எடுக்கக் காரணமாகவும் இருக்கிறார்கள்" என்கிறார்கள் சில அமைச்சர்கள்.

ம.தி.மு.க.வில் காணப்



"மற்ற கட்சிகளின் வாரிசு அரசியலைப் பற்றி நாங்கள் எதுவும் விமர்சிக்க முடியாது. ஏனென்றால் எங்கள் கழகத்தில் ஒப்பனாகவே வாரிசுகளின் ஆதிக்கம்தான். அவர்களைத் தாண்டி வந்தால் 'சாமியை' விழுங்கும் பூசாரிகள் இருக்கிறார்கள். இவர்கள் எங்களைத்தான் மிரட்டுகிறார்களே தவிர, காக்கிச் சட்டை போட்ட யாரைப் பார்த்தாலும் பயந்து நடுங்குகிறார்

ன்" என்கிறார் கேப்டன் கட்சி விசுவாசி ஒருவர்.

ஒரு வழியாக காங்கிரஸ் மேலிடம் தமிழக அமைச்சரவையில் இடம் கேட்டு தி.மு.க.வை வலியுறுத்தத் தொடங்கிவிட்டதாக, தமிழக காங்கிரஸ் எம்.எல்.ஏ.க்கள் வாய் நிறைய சிரிப்புடன் சொல்கிறார்கள். காங்கிரஸை மட்டும் சேர்க்காமல், பா.ம.க.வையும் சேர்த்துக்கொள்ள கலைஞர் முடிவு செய்திருக்கிறாராம். தை பிறந்தால் முடிவு தெரியுமாம்!

அ.தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்கள் ஏதேனும் கோரிக்கையுடன் வந்தால், அவர்களுக்கு உதவி செய்யும்படி மாவட்ட ஆட்சியாளர்களுக்கு வாய்மொழியாகச் சொல்லப்பட்டிருக்கிறதாம். 2007-ஆம் வருடத்துக்குள் அ.தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்களில் கணிசமானவர்களை உடைத்தெடுக்க தி.மு.க. தரப்பு முனைப்பு காட்டி வருகிறது என்கிறார்கள்.

- **சஞ்சயன்**

படங்கள்: **ஸ்ரீஹரி**






**கல்கி**

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்
எம். மோகன்
ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :

ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

'சிங்காரித்து மூக்கறுத்தல்' என்பது நாட்டுப்புறங்களில் சொல்லப்படும் பழமொழி. அந்தக் கதைதான் தடகள வீராங்கனை சாந்தியின் விஷயத்திலும் நடந்தேறியுள்ளது. கடந்த வாரத்தில் பத்திரிகைகளின் தலைப்புச் செய்திகளிலும், சேனல்களின் சீராட்டல்களிலும் சிறப்பிக்கப்பட்டவர் இன்று கையறு நிலையில்...



ஊர்வன முதல் பறப்பன வரை எல்லா ஜீவராசிகளுமே ஜீன்களின் விளையாட்டுக்கும், ஹார்மோன்களின் கண்ணாமூச்சிக்கும் கட்டுப்பட்டவைதான். இதில் தாவரங்கள் கூடத் தப்பிக்க முடியாது எனும்போது, இதைப் போன்ற நிகழ்வுகளை முதிர்ந்த பார்வையுடன் நோக்கும் அளவுக்கு சமூகம் வளர்ச்சியுறாதது துரதிர்ஷ்டமே.

சாந்தி விஷயத்தில் யாரைச் சொல்லி நோவது என்பதுதான் கேள்வியாக இருக்கிறது.

தன் மகளின் உயர்வு கண்ட - அந்த உயர்வும் ஒரே நாளில் பறிபோகக் கண்ட பெற்றோர்கள் ஒருபக்கம்.. 'நான் பெண்தான், பெண்தான்' எனக் கூறும் சாந்தி ஒரு பக்கம்... தெற்காசியப் போட்டிவரை அவரை அனுப்பி வைத்த இந்திய விளையாட்டுக் கழகம் இன்னொரு பக்கம்... என அனைத்துத் தரப்புகளிலிருந்தும் அவிழ்க்கப்படாத சிக்கல் முடிச்சுகள் அவரை நெருக்கித் தள்ளுகின்றன.

சாந்தியின் மனம் புண்படுத்தப்படுவதும் தாறுமாறாக விமர்சிக்கப்படுவதும் தவிர்க்கப்பட வேண்டியவை.

'பாலினக் குறைவு என்பது நிராகரிப்புக்குரிய நிலையோ குற்றமோ அல்ல என்கிறார் இன்டர் நியூஸ் நெட்வொர்க்கின் டெக்னிக்கல் ஹெல்த் அட்வைசர் டாக்டர் ஜெயா ஸ்ரீதர்:

"முதலில் ஜெண்டர் என்பதை நாம் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஜெண்டர் என்பது ஒரு கலாசாரக் குறியீடு. தன்மை என்பது அதன் பொருள். ஆணுக்கான நடை,



• டாக்டர் ஜெயா ஸ்ரீதர்




# சாந்தி நிலவ வேண்டும்!

உடை, பாவனைகள் விளங்கினால் ஆண் தன்மை (மாஸ்குலைன் ஜெண்டர்) என்றும் பெண்ணுக்குரிய நடை, உடை பாவனைகளை வைத்து (ஃபெமினைன் ஜெண்டர்) பெண் தன்மை என்றும் கூறுகிறோம். ஒரு தாயின் வயிற்றில் சிசு வளரும்போது ஏற்படும் ஜீன்ஸ் மற்றும் ஹார்மோன்களின் செயல்பாட்டைப் பொருத்தே ஒரு குழந்தைக்கு இத்தன்மைகள் அமைகின்றன. பிறந்து வளரும் ஒரு குழந்தை ஆணாக இருந்து பெண் தன்மையுடன் இருப்பதற்கும், பெண்ணாக இருந்து ஆண் தன்மையுடன் இருப்பதற்கு இதுவே காரணமாக இருக்கிறது. இது மனித இனத்தில் எப்போதுமே இருந்து வரும் ஒன்றுதான். இந்த நிலைப்பாடுடன் வளரும் குழந்தைகள் பெற்றோர்களாலும், சமூகத்தாலும் இழிவாகக் கேலிப் பொருளாகப் பார்க்கப்படுவதுதான் கொடுமையான விஷயம். தொற்று நோயாளியிடமும் எய்ட்ஸ் நோயாளியிடமும் பரிவு கொள்ளத் தெரிந்த நமக்கு, இவர்களை மட்டும் கேலி செய்து, இழிவாய் நடத்துகிற மனப்பாங்கு ஒழிய வேண்டும். சமுதாயம் பக்குவப்பட, பக்குவப்பட இவர்களும் ஏற்றுக்கொள்ளப்படுவார்கள் என்றே நான் நம்புகிறேன்.

சாந்தி விவகாரத்தில், அவர் தன் மனத்தில் பெண் என்னும் நம்பிக்கை வைத்துள்ளார். அவரைப் பெண்ணாகவே கருதுவதில் குற்றம் ஏதுமில்லை. அவர் மனம் சாந்தி அடைவதே முக்கியம்.

விளையாட்டுத் துறையால் இவரைப் போல் ஏகப்பட்ட சாந்திகள் புறக்கணிக்கப்பட்டுள்ளார்கள்; நிர்க்கதிக்கு ஆளாக்கப்பட்டுள்ளார்கள். பாலினப் பிரச்னையோடு ஒரு விஞ்ஞானி இருந்தால், அவரிடமிருந்து பயன் பெறும் இந்தச் சமூகம், மருத்துவர் இருந்தால் அவரிடமிருந்து நன்மை பெறும் சமூகம், சாந்தியைப் போன்ற சாதனையாளர்களைப் புறக்கணிக்காமல், அவர்களும் நாளைய சரித்திரத்தில் இடம்பெற வழிவகை செய்ய வேண்டும்.

'கேலியும் கிண்டலும் புறக்கணிப்பும் நின்று புரிதலும், அங்கீகாரமும் அரவணைப்பும், சம அந்தஸ்தும் இப் பிரிவினருக்கு வழங்கப்படாவிடில் மதுபானக் கடைகளும் விபசார விடுதிகளுமே இவர்களுக்குப் புகலிடமாகிப் போகும். அவர்களிடையே எய்ட்ஸ் விழிப்புணர்வைப் பரப்ப வேண்டும் என்ற



• சாந்தியின் சகோதரிகள்...

## பதறிப் போன மனசு!

சாந்தியின் சொந்த ஊரான கத்தக்குறிச்சி கிராமவாசிகள் சோகத்துக்குச் சொந்தக்காரர்களாகிவிட்டனர்.

'பேப்பர்ல நியூஸ் படிச்சுத்தான் நாங்க தெரிஞ்சுக்கிட்டோம். அப்படியே இடிஞ்சு போய்ட்டோம். இதுல யாரை என்ன சொல்றதுன்னே தெரியலை. இந்தப் பொண்ணு இதுக்கு முன்னாடி பல பரிசுகள் வாங்கிட்டு வந்திருக்கு. இது ஒண்ணும் அது கலந்துக்கிட்ட முதல் போட்டி இல்ல. அப்படி இருக்கும்போது இது விதியோட விளையாட்டா என்னன்னும் புரியலை எங்களுக்கு'' என்கிறார் சாந்தியின் மாமா துரைக்கண்ணு.

'ஒரே வாரத்துல மொதல் நாளு எங்க ஊரே திருவிழா கணக்கா இருந்துச்சு. கடைசி நாள்ல ஊர்ல ஒவ்வொருத்தர் மனசுலயும் இடி விழுந்தாப்புல ஆகிப் போச்சுங்க.'' என்றார் கிராமவாசியான அழகன்.

“எங்க வீட்லயே சாதிச்சுக் காட்டணும் - அப்படிங்கற வெறி எங்க அக்காகிட்டே ரொம்ப இருக்கும். அப்படி சாதிக்கறது மூலமா குடும்பமும் நல்ல நெலமைக்கு வந்துடும்னு எங்க அக்காவுக்கு நம்பிக்கை. அந்த நம்பிக்கை வீண் போகலை. ஆனா, சூறாவளியா இப்பிடி ஒரு சேதி வரும்னு எங்க வீட்லயும் சரி, எங்க ஊர்லயும் சரி யாருமே எதிர் பார்க்கலை. விருதுகள், பதக்கங்கள், பணம் எல்லாத்தையும்விட எங்களுக்கு எங்களோட அக்காதாங்க ரொம்ப முக்கியம். அவங்களோட மனநிம்மதிதான் எங்களோட நிம்மதி!'' என்று சேர்ந்தாற்போல கண்ணீர் மல்கக் கூறுகின்றனர் சாந்தியின் சகோதரிகள்.

“அந்தச் சேதி கேள்விப்பட்டதும் எங்களுக்கு எதையுமே நம்ப முடியலை. பெத்த மனசு பதறிப் போச்சுங்க'' எனக் கண்ணீர் விட்டனர் சென்னையிலிருந்து திரும்பியிருந்த சாந்தியின் பெற்றோர்களான சௌந்தர்ராஜன் - மணி மேகலை ஆகியோர்.

- திருநாவு

உயர்வு மனப்பான்மை கொள்ளும் நம்மிடையே, அவர்களைப் பற்றிய விழிப்புணர்வு இல்லாதது வெட்கக்கேடான விஷயம். சம்பந்தப்பட்ட நபர் தம்மை ஆணாக அல்லது பெண்ணாக எப்படித் தீர்மானிக்கிறார்களோ, அப்படியே ஏற்பதுதான் சமூகக் கடமை!'' என்று உணர்ச்சி மேலிடப் பேசினார் டாக்டர் ஜெயா ஸ்ரீதர்.

- அருணா.செந்தில்குமரன்




1964-ல் நடந்த டோக்கியோ ஒலிம்பிக்ஸில் கலந்து கொண்ட போலந்து நாட்டுத் தடகள வீராங்கனை ஈவா, ஆண்தான் என்று பலர் குற்றம் சாட்டினர். 'அங்கங்கள் பெண்ணைப் போல் இருந்தாலும் இவரது உடலில் விஞ்சியிருப்பது ஆண்மையே!' என்று பட்டிமன்ற நடுவர் பாணியில் தீர்ப்பு சொன்னது நிபுணர் குழு! இப்படிச் சொன்ன முகங்களில் அடுத்த சில வருடங்களில் கரி! அழகான ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தார் ஈவா!

சமீபத்திய உதாரணம் - செக்கோஸ்லோவாக்கியா நாட்டுத் தடகள வீராங்கனை ஜார்மிலா. பரிசோதனையில் அவர் பெண்தான் என்று உறுதியாகச் சான்றிதழ் வழங்கப்பட்டாலும் விமர்சனங்கள் சுலபத்தில் நிற்கவில்லை.

- ஜி.எஸ்.எஸ்



**பரிசு**
**ரூ.2000/-**

செல்போன் இல்லாதவங்களை இன்னைக்கு விரல்விட்டு எண்ணிடலாம். உங்களுக்கு வந்த எஸ்.எம்.எஸ். ஜோக்ல பெஸ்ட்டா நீங்க கருதறதை (நோ ஆபாசம்!) எங்களுக்குத் தட்டி விடுங்க. ஓர் அஞ்சலட்டையில் ஒரு ஜோக்தான். தேர்ந்தெடுக்கப்படுற எட்டு சிறந்த எஸ்.எம்.எஸ். ஜோக்குகளுக்கு தலா ரூ. 250 பரிசு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.



கடைசி தேதி: 2.1.2007



நடிகர் நரேனுக்கு இயல்பான நடிகர் என்ற அடையாளத்தை 'சித்திரம் பேசுதடி' வழங்க, 'நெஞ்சிருக்கும் வரை' தமிழ் ரசிகர்களிடையே இருப்பதுதான் தமது இலட்சியம் என்று இயல்பாகக் கூறுகிறார், எந்தப் 'பள்ளிக்கூடமும்' சொல்லித் தராமலேயே...

# வாரிசு நடிகர்களைச் சமாளிப்பேனா?

'சினிமாங்கிற இந்தக் கனவுத் தொழிற் சாலையில் நுழைய நுழைவுச் சீட்டு எது?' என்று அவரைப் போலவே நாமும் அமைதியாக ஆரம்பிக்க...

''நான் காலேஜ் முடிச்சுட்டு, ஃபிலிம் இன்ஸ்டிடியூட்ல கேமரா மேன் கோர்ஸ் படிச்சேன். அப்புறம் ராஜீவ்மேனன் சார்கிட்ட அசிஸ் டெண்டா சேர்ந்து, நிறைய விளம் பரப் படங்கள்ல ஒர்க் பண்ணி னேன். கேமராமேனா இருந் தாலும் என்னையுமறியாமல் நடிப்பு மேலேதான் எனக்குக் காதல். இதை நான் ராஜீவ் மேனன் சார்கிட்ட சொன் னேன். உடனே அவரோட 'மார்னிங் ராகா'னு இங்கிலீஷ் படத்துல சின்ன ரோல் கொடுத்தார். மலையாளத்துல அடூர் கோபாலகிருஷ்ணன் சார் இயக்கத்துல 'நிழல்குத்து'ல சின்ன ரோல் நடிச்சேன். அதைத் தொடர்ந்து ஜெயராஜ் சார் டைரக்ஷன்ல 'ஃபார் தி பீப்பிள்'ல

இன்ஸ்பெக்டரா நடிச்சேன். அதைப் பார்த்துட்டுத்தான் மிஷ்கின்சார் எனக்கு 'சித்திரம் பேசுதடி'ல வாய்ப்புக் கொடுத் தார்."

**தமிழ் சினிமாவில் நடிப்பது எப்படியிருக்கு?**

"முதல்ல தமிழ் பேசுறது கஷ்டமா இருந்தது. ஆனா என் நண்பர்கள் மூலமா தமிழ் கத்துக்கிட்டு நல்லாப் பேச ஆரம் பிச்சுட்டேன். திறமை இருந்தா தமிழ் சினி மாவுல கண்டிப்பா பெரிய லிஃப்ட் கிடைக்கும்."

**'தமிழ்ல முதல் படம் பெரிய வெற்றி அடைஞ்சிட்டதால, இனிமே உங்களுக்கு ஏத்த மாதிரி கதை பண்ணச் சொல்வீங் களா?' என்றால், முடிக்கும் முன்பே பதறி,**

"ஐயய்யோ... அப்படியெல்லாம் நான் சொல்லவே மாட்டேன். நான் இயக்குநர் களின் நடிகன்" என்கிறார்.

## "நான் இயக்குநர்களின் நடிகன்"

**'சித்திரம் பேசுதடி'க்குப் பிறகு ஏன் இவ்வளவு கேப்?**

"நான் தமிழ் சினிமாவுல நிலைக் கணும்னா நல்ல கதையா தேர்ந்தெடுத்துத் தானே பண்ணணும்! அப்படி செலக்ட் பண்ணினதாலதான் இடைவெளி. 'நெஞ் சிருக்கும் வரை' நிச்சயம் எனக்குப் பேர் வாங்கித் தரும். தங்கர் சாரோட 'பள்ளிக் கூட'மும் அப்படித்தான்னு நம்பறேன்."

**வாரிசு ஹீரோக்கள் மத்தியில் நீங்க எப்படி சமாளிக்கப் போறீங்க?**

'திறமை இருக்கிறவங்க ஜெயிக்க முடியும்; நிலைக்க முடியும். 'வாரிசு'ங்கறது ஒரு நுழைவுச்சீட்டு, அவ்வளவுதான். என் மேல எனக்கு நம்பிக்கை இருக்கு!". உறுதியாகச் சொல்கிறார் நரேன்.

- ஆ. முத்துராமலிங்கம்

படம்: பொள்ளாச்சி சுந்தரம்

ம.தி.மு.க.வில் புயல் வீசத் துவங்கி விட்டது. அவைத் தலைவர் எல்.கணேச னும், துணைப் பொதுச் செயலாளர் செஞ்சி ராமச்சந்திரனும், வைகோவுக்கு எதிராகப் போர்க்கொடி தூக்கிவிட்டார் கள். ம.தி.மு.க. பிளவு படுமா? செஞ்சி ராமச்சந்திரனைச் சந்தித்தபோது சூடாகப் பேசினார்.

**உங்களுக்கும் வைகோவுக்கும் என்ன கருத்து வேறுபாடு?**

"சுயநலத்தின் உச்சகட்ட சின்னமாக விளங்குகிறார் வைகோ. எங்களை அவர் 'சகா' என்றுதான் அழைப்பார். ஆனால், அவருக்கு எந்தவிதமான கெடுதலையும் நினைக்காவிட்டாலும்கூட, கட்சியின் மாவட்டச் செயலாளர்களுடன் தனித் தனியாகப் பேசி, எங்களுக்கு எதிராகச் செயல்பட வைப்பார். கட்சியில் முக்கிய மான முடிவுகள் எடுக்கும்போதுகூட தன்னை முன்னிறுத்தித்தான் செயல்படு வார். உட்கட்சிக் கூட்டங்களில் அவரது கருத்துக்கு எதிராக நாங்கள் பேசுவோம் என்று தெரிந்தால், எங்களுக்கு எதிராகப் பேசப் பலரைத் தயார் செய்வார். ம.தி.மு.க.வில் உட்கட்சி ஜனநாயகம் என்பதே கிடையாது."

**மாறி மாறி கூட்டணி வைத்துக் கொண்டதால் வைகோ செல்வாக்கு பாதாளத்தில் போய்விட்டதாக எல்.கணேசன் சொல்லியிருக்கிறாரே?**

"அப்படிக் கூட்டணி வைப்பதும் சுய நலம்தான். பாராளுமன்றத் தேர்தலில் தி.மு.க., அ.தி.மு.க. என்று கூட்டணி வைத்தாலும் சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.வைத் தோற்கடிப்பதே அவர் நோக்கம். 2001 மற்றும் 2006ம் ஆண்டு சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.வுடன் அவர் கூட்டணி வைக்காதது, கலைஞர் ஆட் சிக்கு வருவதைத் தடுக்க வேண்டுமென் பதற்காகத்தான். தேர்தல் முடிந்த பிறகு ம.தி.மு.க.வைக் கொள்கைப் பாதையில் நடைபோடவிடாமல் ஜெயலலிதாதான் அடுத்த முதல்வர்' என்று வைகோ மேடைக்கு மேடை பேசியது தவறான அணுகுமுறை. அ.தி.மு.க.வுக்குக் கட்சியை அடகு வைத்துவிட்டார் வைகோ. இலங்கையில் போர் நடக்கும் சூழலில் ம.தி.மு.க. கொள்கைக்கு நேர் எதிரான கருத்து கொண்டிருக்கும் ஜெ.வோடு வைகோ நெருக்கமாக இருப்ப தால், தமிழர்களுக்கு அனு சரணையாக மத்திய அர சைச் செயல்பட வைக்கும் வாய்ப்பையும் இழக் கிறோம்."

# "ம.தி.மு.க.வை அடகுவைத்த வைகோ..."



• ஒரு சந்திப்பில்... எல்.ஜி., வைகோ...

**நீங்களும், எல்.ஜி.யும் மத்திய அமைச்சரவையில் சேர வைகோ ஒப்புக் கொள்ளாததால்தான் போர்க்கொடி தூக்கியிருப்பதாகச் சொல்கிறார்களே?**

"மக்கள் நம்மை சட்டமன்ற உறுப்பினராகவோ அல்லது பாராளுமன்ற உறுப்பினராகவோ தேர்ந்தெடுப்பது எதற்காக? வாய்ப்புக் கிடைத்தால் அமைச்சராகப் பணியாற்றி மக்களுக்குத் தொண்டு செய்ய முடியும் என்பதற்காகத் தானே! அமைச்சர் பொறுப்பு ஏற்பது என்பது தவறான காரியமா? மத்திய அமைச்சரவையில் பங்கேற்றால், அவர்கள் எடுக்கும் தவறான முடிவுகளுக்கு ம.தி.மு.க.வும் பொறுப்பாகிவிடும் என்பதால் அமைச்சரவையில் சேர வேண்டாமென்று முடிவெடுத்ததாகக் கூறுகிறார் வைகோ. இன்று மத்திய அமைச்சரவையில் மாறுபட்ட கொள்கைகள்கொண்ட கட்சிகள் குறைந்தபட்ச செயல் திட்டத்தின் அடிப்படையில் அமைச்சரவையில் இடம் பெற்றிருக்கின்றன. எனவே ம.தி.மு.க.வும் அமைச்சரவையில் சேருவதில் எந்தத் தவறும் இல்லை. நமது கொள்கைகளுக்கு விரோதமாக முடிவு எடுக்கப்பட்டால் ராஜினாமா செய்துவிடலாமே! உண்மையான காரணம், எங்களுக்கு அமைச்சர் பதவி கிடைத்தால், எங்கே அவரைவிட செல்வாக்குப் பெற்று விடுவோமோ என்ற எண்ணம்தான். அமைச்சராக இருப்பதில் எங்களுக்கு விருப்பம் கிடையாது. வைகோ பொடா சிறையில் இருந்தபோது 'அமைச்சர் பொறுப்பை ராஜினாமா செய்கிறோம்' என்றோம். அப்போது 'வேண்டாம்' என்று சொன்னவர்தான் இவர்."

# - விளாசுகிறார் செஞ்சியார்

**வைகோ தமது மகனை கலந்தாலோசித்து முக்கிய முடிவுகள் எடுக்கிறார் என்று நினைக்கிறீர்களா?**

"ஓர் உதாரணம் சொல்கிறேன். அவர் பொடாவில் இருந்தபோது, ஜாமீனில் வர வேண்டுமென்று நானும் கண்ணப்பனும் ஜார்ஜ் பெர்னாண்டஸைச் சந்தித்துப் பேசினோம். அப்போது ஜார்ஜ், எங்களிடம் 'நீங்கள் வைகோ ஜாமீனில் வருவது பற்றிப் பேசுகிறீர்கள். ஆனால் அவர் ஜாமீனில் வர விருப்பமில்லை என்று தமது மகன் மூலமாக எனக்குச் செய்தி அனுப்பியிருக்கிறாரே' என்றார். நாங்கள் திடுக்கிட்டுப் போனோம். கண்ணப்பன் மிகவும் கோபப்பட்டு 'இப்படி முக்கியமான விவகாரங்களில் மகன் மூலமாக வைகோ செயல்படுவது கொஞ்சமும் சரியல்ல' என்று வெளிப்படையாகவே சொன்னார். வேறு பல விஷயங்களில்கூட மகன் சொல்லும் யோசனைகள்படி செயல்பட்டு எங்களை அலட்சியப்படுத்தினார் வைகோ."



**"தயாநிதி மாறனை ஒரே ஒரு முறைதான் நான் சந்தித்திருக்கிறேன்"**

**தயாநிதி மாறன்தான் ம.தி.மு.க.வில் பிளவு ஏற்படுத்தும் வேலைகளில் ஈடுபடுகிறார் என்று ம.தி.மு.க.வினர் சொல்கிறார்களே!**

"தவறு. தயாநிதி மாறனை நான் இது வரை ஒரே ஒரு முறை பொதுப் பிரச்னைக்காக மட்டுமே சந்தித்திருக்கிறேன்."

**அடுத்த இலக்கு தி.மு.க.தானா?**

"ம.தி.மு.க.வைப் பிளப்பதாகவும் இல்லை. தி.மு.க.வில் சேருவதாகவும் இல்லை."

- ப்ரியன்

குமார் பத்து வயதுக் குழந்தையாக இருந்தபோது மருந்துகளின் அலர்ஜி காரணமாக (Drug Allergy) மிக மோசமான பாதிப்பை அடைந்தார். இந்தப் பாதிப்பு குமாரின் இரண்டு கண்களிலும் 'கார்னியா' என்ற பகுதியை மிகக் கடுமையாகத் தாக்கியது. நாளடைவில் பார்வை குறைந்து, ஒரு கட்டத்தில் முற்றிலும் பறிபோய்விட்டது. பல வருடங்கள் பார்வையின்றி கஷ்டப்பட்ட குமாருக்கு, புதியதொரு சிகிச்சை முறையில் பார்வையை மீட்டுக் கொடுத்திருக்கிறார், சென்னை சங்கர நேத்ராலயா கண் மருத்துவ நிபுணர் ஜி.சீதாலட்சுமி. அவரைச் சந்தித்தோம்.



• டாக்டர் ஜி.சீதாலட்சுமி

**கார்னியா என்றால் என்ன?**

"கார்னியா என்பது நம்முடைய கருவிழிக்கும் முன்னால் உள்ள ஒரு மெல்லிய திசு. நிறமேயில்லாத, ஒளி ஊடுருவிச் செல்லக்கூடிய, இரத்தக் குழாய்கள் எதுவுமேயில்லாத பகுதி இது. கண் பார்வைக்கு இது இன்றியமையாதது."

**இது எப்போது பாதிக்கப்படுகிறது?**

"தொற்றுநோய், விபத்து, ஊட்டச் சத்துக் குறைவு, மருந்துகளால் ஏற்படும் அலர்ஜி, பிறவிக் கோளாறு போன்ற காரணங்களால் இந்த கார்னியா பாதிப்படையக்கூடும். அதுவும் இரசாயனப் பொருட்கள் கார்னியாவில் பட்டுவிட்டால் பார்வையே பறிபோய்விடும்."

**கார்னியா பாதிக்கப்பட்டால் இதுவரை எந்த விதமான சிகிச்சைகள் மேற்கொள்ளப்பட்டு வந்தன?**

"கார்னியா பாதிக்கபட்டவர்களுக்குக் கார்னியா மாற்று அறுவை சிகிச்சையே செய்யப்பட்டு வந்தது. அதாவது, இறந்தவரின் கண்களை தானமாகப் பெற்று, அதிலுள்ள கார்னியா எடுக்கப்பட்டு பாதிக்கப்பட்டவருக்குப் பொருத்தப்படும். இம்முறையில் சிலருக்கு வெற்றி கிடைக்காது. காரணம் கண் தானமாகக் கிடைப்பதே அரிதாக இருக்கிறது. இன்னொன்று, பொருத்தப்படும் திசுவானது சில சமயங்களில் நோயாளியின் கண்களால் ஏற்றுக் கொள்ளப்படாமல் நிராகரிக்கப்படுவதுண்டு. எனவே நீண்ட நெடிய ஆராய்ச்சிக்குப் பிறகு OOKP (Osteo Odonto Kerato Prosthesis) என்னும் சிகிச்சை முறை கண்டறியப்பட்டுள்ளது. கார்னியா பாதிக்கப் பட்டவர்களுக்கு வரப்பிரசாதமாக அமைந்துள்ளது."

**அது என்ன OOKP சிகிச்சை? அது குறித்து விளக்குங்களேன்...**



"OOKP ஆபரேஷன் மிகவும் சிறப்பு வாய்ந்த, அதிக பலனளிக்கக்கூடிய சிகிச்சை முறை. நோயாளியின் பல்லைப் பயன்படுத்தி அவரது கண்ணுக்குச் சிகிச்சையளிக்கப்படுகிறது."

**ஆச்சரியமாயிருக்கிறதே!**

"ஆம். இந்தப் புதிய முறை இரண்டு நிலைகளில் நான்கு முதல் ஐந்து மாத காலங்களில் செய்யப்படுகிறது. ஒவ்வொரு நிலையிலும் இந்த ஆபரேஷன்களைச் செய்ய எட்டு முதல் பத்து மணி நேரமாகிறது. முதல் நிலையில் நோயாளியின் கோரைப்பல்லை எடுத்து, அந்தப் பல்லில் துளையிட்டு அந்தத் துளையில் ஆப்டிக் சிலிண்டர் வைக்கப்பட்டு, சிமெண்ட் வைத்துப் பூசப்படுகிறது. இந்தக் கட்டமைப்பு மற்றொரு கண்ணுக்குக் கீழேயே பொருத்தப்பட்டு, மெல்லிய திசு ஒன்று சுமார் 4 முதல் 5 மாத காலங்களுக்கு வளர்க்கப்படுகிறது. இதன் மூலம் இந்தக்

கட்டமைப்பில் இரத்தம் முறையாக சப்ளை செய்யப்படுகிறது. இந்த முதல் நிலையில் மியூக்கஸ் மெம்ப்ரேன் பகுதியிலிருந்து சுமார் 6 செ.மீ. விட்ட முள்ள பகுதி பெறப்பட்டு கண்ணின் விழிப்படலப் பகுதி மூடி வைக்கப் படுகிறது.





# பல்லும் பார்வை தரும்!

இரண்டாவது நிலையில் அந்தக் கட்ட மைப்பு பிரித்தெடுக்கப்பட்டு, பழுதான மியூக்கஸ் மெம்ப்ரேன் பகுதியின் பின்னால் பொருத்தப்படுகிறது. பொது வாக, கார்னியா மாற்று ஆபரேஷனில் தானமாகப் பெறப்பட்ட கண்ணிலிருந்து சுமார் 7 முதல் 7.5 மில்லி மீட்டர் விட்டமுள்ள கார்னியா, நோயாளிக்குப் பொருத்தப்படுகிறது. ஆனால் இந்தப் புதிய முறையில் நோயாளியின் உடம்பி லிருந்தே ஒரு பகுதியை (பல்) எடுத்து சுமார் 3 முதல் 3.5 மில்லி மீட்டர் அளவுள்ள செயற்கை கார்னியாவாகப் பொருத்தப்படுகிறது. மற்ற கார்னியா துறை சார்ந்த ஆபரேஷன்களோடு ஒப்பிடும்போது இந்தப் புதிய முறையில் அதிகமான சவால்களைச் சந்திக்க வேண்டி இருந்தாலும் குறிப்பிடத்தக்க பலன் என்னவென்றால், சில நோயாளி களுக்கு, கார்னியாவானது உலர்ந்திருந்த நிலையிலும் இந்த ஆபரேஷன் வெற்றிகர மான முடிவைக் கொடுக்கிறது. இந்த ஆப ரேஷனைக் குறைந்தபட்சம் 18 வயதுக்கு மேல் உள்ளவர்களுக்கு மட்டும்தான் செய்ய முடியும். காரணம் 18 வயதுக்குக் கீழ் உள்ளவர்களின் பற்கள் பால் பற் களாக இருக்கக் கூடும்.

OOKP முறை 1960-ஆம் ஆண்டிலேயே அறிமுகமாகிவிட்டது. ஆனால் ஆரம் பத்தில் இந்த ஆபரேஷன் குறிப்பிடத்தக்க நிறைவைக் கொடுக்காததால் மற்ற மருத்துவர்களால் மறுக்கப்பட்டது. இப்போது சங்கர நேத்ராலயா இதில் வெற்றி கண்டுள்ளது" என்றார் டாக்டர் சீதாலட்சுமி.

- மனோ

படம் : பொள்ளாச்சி சுந்தரம்



# கல்கி



2006 டிசம்பர் 31
விய மார்கழி 16
மலர் : 65
இதழ் : 22

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## தேவை - சீசன் சீர்திருத்தங்கள்!

"சங்கீதத்தின் நோக்கம், அதைக் கேட்பவர்களின் மனங்களை இறைவனிடத்தில் செலுத்துவதாக இருக்க வேண்டும். நமக்குள் இருக்கும் தெய்வீகத்தை உணர்ந்தால் மற்றவர்களிடமும் அது குடி கொண்டிருப்பதை நாம் உணர்வோம்." - இவ்வாறு எம்.எஸ்.சுப்புலட்சுமி தம்மிடம் குறிப்பிட்டதாக நமது குடியரசுத் தலைவர் அப்துல் கலாம் கூறியிருக்கிறார். தமது வாழ்வின் ஊக்க சக்திகளாக தமது தாயாருடன் எம்.எஸ்.சுப்புலட்சுமியையும் அவரது தெய்வீக இசையையும் சேர்த்துச் சொல்லியிருக்கிறார் கலாம். கர்னாடக சங்கீதத்தின் சக்தி எத்தகையது என்பதை அழகாகவும் ஆணித்தரமாகவும் உணர்த்தியிருக்கின்றன கலாமின் வார்த்தைகள். சென்னையில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் டிசம்பர் சீசன் இசை விழா கலாமின் நினைவுகளைத் தூண்டிவிட்டுப் பேச வைத்திருக்கக் கூடும்.

ஆனால், இந்த இசைவிழாவின் நிகழ்ச்சிகள் எல்லாம் கலாம் கொண்டாடிச் சொன்ன கலையின் தெய்வீகத் தன்மைக்கு மரியாதை செய்யும் வகையில் அமைகின்றனவா?

முன்பு மூன்று சபாக்களே இருந்த சென்னையில் இன்று முந்நூறு சபாக்கள். இவை எல்லாமே இசை விழா நடத்தப் போக, போட்டா போட்டியில் நமது உன்னதமான இசையின் சிகரமான நோக்கம் பின்னுக்குத் தள்ளப்பட்டு, ஆர்ப்பாட்டமும் ஆடம்பரமுமே அதிகமாகி வருகின்றன. இது எல்லை மீறிப் போய்விடாமல் இசைக் கலைஞர்களும் ரசிகர்களும் சபாக்களும் கவனித்துக் கொள்ள வேண்டும்.

புறநகரில் 'தொண்டு செய்ய' புறப்பட்டுள்ள புதிய சபாக்களோ குறைந்தபட்ச கச்சேரி சௌகரியங்கள்கூட இல்லாத கல்யாண மண்டபங்களில் கச்சேரிகள் நடத்துகின்றன. இங்கெல்லாம் ஒலி அமைப்பும் அரங்க அமைப்பும் கலைஞருக்கு இழைக்கப்படும் அநீதியாக முடிகின்றன!




மத்தியான கச்சேரி என்று ஒன்று இருந்த இடத்தில் இப்போது மூன்று நடக்கின்றன. இவற்றில் காலி நாற்காலிக்குப் பாடும் தண்டனையை சில சிறந்த கலைஞர்களும் அனுபவிக்க வேண்டியிருக்கிறது. வீணை, புல்லாங்குழல், நாதஸ்வரம் போன்ற பழைமையும் பெருமையும் வாய்ந்த வாத்திய கச்சேரிகளுக்கு ரசிகர்களின் ஆதரவு அநியாயத்துக்குக் குறைந்துவிட்டது.

இளம் கலைஞர்கள் மேடையில் காணப்படாலும், ரசிகர்கள் மத்தியில் இளைஞர்கள் வெகு குறைவு. சிறந்த சீனியர் கலைஞரின் கச்சேரிக்கு டிக்கெட் வாங்கி வந்து கேட்கிற ரசிகர் கூட்டம் மிகக் குறைவாக இருக்கிறது. அதே சபாவில், முன்னுக்கு வரும் இளம் கலைஞரின் இலவச கச்சேரிக்குத் தாளமாளாத கூட்டம்!

சபாக்கள் பெறும் ஸ்பான்ஸர்ஷிப் தொகை அதிகரித்தாலும் கலைஞர்களுக்கான சன்மானத்தை உயர்த்தும்படி அவர்களே தன்மானத்துடன் போராடிக் கேட்க வேண்டியிருக்கிறது!

பத்துக் கச்சேரிகளுள் மூன்றில் வசூல் நிச்சயம்; அது போதும் என்ற போக்கு ஆரோக்கியமானதல்ல. டிக்கெட்டுகளின் விலையை ரூ.500, 250, 100 என்ற எட்டாத உயரத்திலிருந்து 100, 50, 25 என்ற எட்டும் சௌகரியத்துக்குக் குறைக்கலாம். நிறைய கூட்டத்தை ஈர்க்கும் பிற்பகல் கச்சேரிகளுக்கு 5, 10 என்று டிக்கெட் போட்டு, புதிய ரசிகர்களிடையே டிக்கெட் வாங்கும் பழக்கத்தை உருவாக்குவதும் அவசியம்.

பெரிய அரங்கின் மையப் பகுதியிலுள்ள இருக்கைகளுக்குக் கூடுதல் தொகை வசூலித்துவிட்டு, ஓரத்து இருக்கைகளில் அமர இலவச அனுமதி வழங்கலாம். பொருளாதார வசதியற்ற உண்மையான ரசிகர்கள் வாழ்த்துவார்கள்.

பிற்பகல் கச்சேரிகளை இருட்டு வழியும் காலி சபாக்களில் நடத்துவதற்குப் பதிலாக, பள்ளி - கல்லூரி அரங்குகளில் சுழற்சி முறையில் நடத்தி, மாணவ சமுதாயத்திடையே இக் கலையைப் பிரபலப்படுத்தலாம். இக் கச்சேரிகளிடையே சிறு விளக்கங்களைத் தந்து இளம் ரசிகர்களை உருவாக்க உதவலாம்.

இப்படியெல்லாம் நூதனமாகச் சிந்திப்பதுடன் தரத்துக்கு மட்டுமே இடமளிக்கும் வைராக்கிய பிரதிக்ஞையை சென்னை சபாக்கள் மேற்கொள்ள வேண்டும். 'நன்கொடை தந்தால் பாட வாய்ப்பு,' 'சுவனீயருக்கு விளம்பரம் வாங்கித் தந்தால் கச்சேரி வாய்ப்பு' என அரும்பியுள்ள நடைமுறை கர்னாடக சங்கீத உலகில் நாராசமாக ஒலிக்கும் அபஸ்வரம்!

கலைஞர்களும் ரசிகர்களும் விரும்புவது நல்ல கச்சேரியை, நல்ல டிஃபன் காபியை மட்டுமல்ல; நல்ல நிர்வாகத்தையும்தான்! ●





# "கலாபூர்வமான படம் காதல் வரும் பருவம்!"

## -சென்சார் போர்டு புகழாரம்!

கஸ்தூரிராஜாவின் 'இது காதல் வரும் பருவம்' படம் குறித்து நமது இதழில் வெளியான கண்டனங்கள் மற்றும் வாசகர்கள், பெற்றோர்கள், தலைமையாசிரியர்கள் எழுதிய நூற்றுக் கணக்கான கடிதங்களுடன் தமிழக தணிக்கைக் குழு அலுவலகத்துக் குச் சென்று, மண்டல அதிகாரி பாபு.ராமசாமியைச் சந்தித்தோம்.

கட்டுக் கட்டான கடிதங்களை மேலோட்டமாகப் பார்த்துவிட்டு,

''இது ஒன்றும் அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு வந்த கடிதங்களாகத் தெரியலையே! போஸ்டரைப் பார்த்துட்டு எழுதியிருக்காங்க போலிருக்கு'' என்றவர்,

''படம் நல்லாருக்கே. அருமையா இருக்கு. தான் எடுத்துக்கிட்ட விஷயத்தை நல்ல கலையுணர்வோட கலாபூர்வமா, நுணுக்கமாகச் சொல்லியிருக்காரு டைரக்டர். எனக்கொன்னும் ஆபாசமாவோ, விரசமாவோ தெரியலை. 13க்கும் 15க்கும் இடைப்பட்ட சம்பவம்னு விளம்பரப் படுத்தலன்னா இன்னும் நல்லாப் போயிருக்கும்னு நினைக்கிறேன். கொஞ்சம் கொஞ்சம் அடல்ட் காட்சிகள் இருக்கறதால 'ஏ' சர்ட்டிஃபிகேட் கொடுக்க வேண்டியதா போச்சு. மற்றபடி இது கலாபூர்வமான படம்!

மாணவர்களைவிட பெற்றோர்கள் பார்க்க வேண்டிய படம், 'இது காதல் வரும் பருவம்' உங்க பத்திரிகையோட கண்டனத்தால் படத்தை இரண்டாவது முறை பார்த்தோம். எனக்கோ, எங்கள் குழுவுக்கோ பெரிய அளவு நெருடலாக இல்லை'' என்கிறார் பாபு ராமசாமி!

ஆபாசம், வன்முறை போன்றவை சமூகத்தில் திரைப்படத்தின் வாயிலாக ஊடுருவக் கூடாது என்பதற்காக மக்கள் வரிப் பணத்தில் இயங்கி வரும் தணிக்கை மண்டல அதிகாரியின் 'பொறுப்பு' மிகுந்த வக்காலத்தில் 'மனங்குளிர்ந்து' திரும்பினோம்.

- பாலசக்தி

படம்: பொள்ளாச்சி சுந்தரம்



சிறந்த சிந்தனையாளர்
நகைச்சுவை மன்னர்
அரசியல் விமர்சகர்
திரு. **சோ** அவர்களை
ஆசிரியராகக் கொண்ட

# துக்ளக்

வார இதழை
விநியோகம்
செய்வதில்
**கல்கி** நிறுவனம்
பெருமையடைகிறது.




**10.01.2007 இதழ் முதல்**
**பிரதி ஒன்றின் விலை ரூ.7/-**

**கல்கி, மங்கையர் மலர் விற்பனையாளர் அனைவரிடமும் ஒவ்வொரு வாரமும் வியாழக்கிழமை அன்று கிடைக்கும்.**

**சந்தா விவரம் :**

உள்நாடு : ஒரு வருடம் : ரூ.390.00

வெளிநாடுகள் (விமானத் தபால்) : ஒரு வருடம் : 45 யு.எஸ். டாலர்

சந்தா தொகையை தங்கள் முழு விலாசத்துடன் பரதன் பப்ளிகேஷன்ஸ் பி. லிட் என்ற பெயரில் **at par cheque** அல்லது **DD** மூலம் பின்வரும் முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.

**சர்க்குலேஷன் மேனேஜர், பரதன் பப்ளிகேஷன்ஸ்,**
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.



# பெருமயல் பெண் 11

பக்தியும் காதலும் ஒன்றே என்று சொல்லத் தீர்மானித்த பின் ஆழ்வார்களுக்குத் திருமாலின்மேல் தங்கள் பக்தியின் பல வடிவங்களை விவரிக்க ஒரு மிகப் பெரிய சௌகரியம் கிடைத்ததைப் போல ஆகிவிட்டது. நம்மாழ்வார் ஒரு தாய் தன் மகள் செய்யும் காரியங்களைப் பற்றி மிகவும் கவலைப் படும் விதத்தில் திருவாய்மொழியில் சில அற்புதமான பாடல் களைப் பாடியிருக்கிறார். 'என்ன ஆச்சு இந்தப் பெண்ணுக்கு' என்று கவலைப்படுவதைப் போல பல ஆழ்ந்த கருத்துகளை ஒளித்து வைத்து எளிமையாகச் சொல்லி நம்மை வியப்பில் ஆழ்த்துகிறார்.

மயல் என்ற வார்த்தைக்குப் பல அர்த்தங்கள் உண்டு. மயக்கம், பித்து மிகுந்த பிரேமை அவற்றுள் இங்கே (infatuation), என்று கொள்வோம். 'மயல் செய்தார்க்கு' என்று சொல்லும்போது பெருமான் அவளைப் பைத்தியமாக்கி வைத்திருக்கிறார். சுற்றுப்பட்டவர்களிடம் என்ன செய்யப் போகிறேன் என்று கவலைப்படுகிறார். அவள் செய்யும் காரியங்கள் என்ன?

மண்ணை இருந்து துழாவி வாமனன் மண் இதுவென்னும்
விண்ணைத் தொழுது அவன்மேவு வைகுந்த மென்று கைகாட்டும்
கண்ணை யுண்ணீர்மல்க நின்று கடல்வண்ணன் என்னும் அன்னே! என்
பெண்ணைப் பெருமயல் செய்தார்க்கு என் செய்கேன்! பெய்வளையீரே!
(மேவும் - வசிக்கும்; அன்னே - துக்கக் குறிப்பு; மயல் - மயக்கம்; பித்து)

மண்ணைத் துழாவி 'வாமனாவதாரத்தில் முன்பு அளந்த பூமி இது' என்கிறாள். வானத்தை நோக்கித் தொழுது, 'அவன் வாழும் வைகுந்தம் இது' என்று காட்டுகிறாள். கண்களில் கண்ணீருடன் 'அவன் கடல் நிறத்தவன்' என்கிறாள். என் பெண்ணுக்குப் பெரும் பித்தை ஏற்படுத்தியவருக்கு நான் என்ன செய்வேன் வளையலணிந்த பெண்களே!



(உங்கள் வளையல்கள் கழலாமல் இருக்கின்றன. என் பெண்ணின் வளையல்கள் அனைத்தும் கழன்றுவிட்டன என்பதைக்) குறிப்பிடுகிறார்! மண்ணுக்கும் விண்ணுக்கும் அதிபதி நாராயணன்தான் என்பதை அந்தத் தாய் தன் மகளுடைய வெட்கம் தவிர்த்த செயல்கள் வழியாக, கவலை தோன்றும் வாசகங்களில் வருணிக்கும்போது தெய்வ பக்தி ஒரு பித்து - எல்லாவற்றையும் மறந்த நிலை என்பதை மறைமுகமாகச் சொல்கிறார். உண்மையாகப் பார்த்தால், தன் மகள் செய்யும் காரியங்களைப் பற்றி அந்தத் தாய் கவலைப்படவில்லை; பெருமைப்படுகிறாள் என்பது உங்களுக்குப் புரிந்தால் சரி.

சுஜாதா

# நூல் வெளியீடு

ஆன்மிக ஆசான்கள்

## ஸ்ரீஸ்ரீ பரமஹம்ச யோகானந்தர் - ஸ்ரீஸ்ரீ தயாமாதா

ஆகியோரின்

# எப்படி வாழ வேண்டும்?

என்ற புத்தகத் தொகுதி வெளியீடு!

- குழந்தை வளர்ப்பு என்னும் திறன்மிகு பணி
- இறந்துவிட்ட நமது அன்புக்குரியவர்கள் எங்கே இருக்கின்றனர்?
- பதிலளிக்கப்பட்ட பிரார்த்தனைகள்
- தெய்வீக அன்பை வளர்ப்பது எப்படி?
- நடத்தை குறைகளை வெல்லுதல்
- உங்கள் வாழ்க்கைக்கு மறுவடிவமளித்தல்

நாள்:

2-01-2007 மாலை 6.00 மணி

இடம்:

**ஸ்ரீ ராகவேந்திரா மண்டபம்**
கோடம்பாக்கம், சென்னை - 600 024.

வெளியிடுபவர்:

**திருமதி. G. திலகவதி, I.P.S.**
(Addl. D.G.P., Tamilnadu Police)

சிறப்பு விருந்தினர் :

**Dr. D. விஸ்வநாதன்**
துணைவேந்தர், அண்ணா பல்கலைக்கழகம், சென்னை.

அனைவரும் வருக!

பாக்கெட் சைஸ் ஒவ்வொன்றும் விலை ரூ. 5/-

பரமஹம்ச யோகானந்தரின்

## ஒரு யோகியின் சுயசரிதம்

788 பக்கங்கள் ரூ. 100

மற்றும் இதர நூல்கள் கிடைக்குமிடங்கள்

யோகதா சத்சங்க சொஸைடி ஆஃப் இந்தியா, ராஞ்சி - 834 001.
யோகதா சத்சங்க தியான கேந்திரம், சென்னை - 10. ✆ : 044-32523665
2007 ஜனவரியில் சென்னையில் நடைபெறும் புத்தகக் காட்சி
மற்றும் அனைத்துப் புத்தகக் கடைகள்

RAE-3995

# தடா கொடுக்கும் தன்னம்பிக்கை!

ஓவியர் அரஸ்

இந்த மண்ணில் பிறந்தது முதல் இன்று வரை நம் கூடவே இருக்கிற விஷயம் உடம்பு. அந்த உடம்புக்கு எது ஏற்றது, எது தேவையில்லாதது, எப்படி இந்த உடலைக் கையாள்வது என்று தெரியாமல், சின்னதாக ஒரு பிரச்னை என்றாலும், உடனே பதறிப்போய் மருத்துவமனைக்கு ஓடுகிறோமே அது ஏன் என்ற கேள்வி எனக்கு எப்போதுமே உண்டு.

என்னுடைய பெற்றோர்கள், முன்னோர்களுடைய உணவுப் பழக்க வழக்கங்களையும், உடல் நலனைக் குறித்த விழிப்புணர்வுகளையும் பின்பற்றி வரும் என்னுடைய கால்கள் இன்று வரை எனக்காக மருத்துவமனைப் பக்கம் சென்றதேயில்லை. ருசியான உணவு - ஆனால் அதையே அளவுடன் சாப்பிடுகிறேன்.

ஓர் ஓவியனுக்கு அதிகபட்ச கற்பனா சக்தி இருக்க வேண்டும். அதிலும் பத்திரிகை ஓவியனாக இருக்கிற எனக்கு வேலையில் மூழ்கிவிட்டால் "பசி சிக்னல்" மூளையை எட்ட கொஞ்சம் தாமதமே ஆகிறது. அந்த வகையில் பசியைக் குறித்த எச்சரிக்கை உணர்வுடனேயே செயல்பட்டு வருகிறேன். காலை, மதியம், இரவு உணவு நீங்கலாக, நொறுக்குத் தீனிகளுக்குத் தடா போட்டு வைத்துள்ளேன். இப்படித் தடா போட்டு வேண்டாதவற்றைத் தவிர்ப்பது, உடல் நலனைக் குறித்த தன்னம்பிக்கையை எனக்கு வாரி வழங்குகிறது. கற்பனைக்குத்தான் தீனி போடவேண்டும் என்பதே என் கொள்கை.

உணவு முறைக்கு அடுத்து இன்னொரு முக்கியமான விஷயம் 'பேச்சு'. நூறு வார்த்தைகளில் பேச வேண்டிய ஒரு விஷயத்தைப் பத்து வார்த்தைக்குள் 'எடிட்' செய்து முடிப்பது எப்படி என்பதே என் எண்ணம்! அவ்வாறே கடைபிடித்தும் வருகிறேன். சத்தில்லாத 'சளசள' பேச்சு



களில் எனக்கு உடன்பாடு கிடையாது. பேசப் பேச உடலில் எனர்ஜிதான் குறையும் என்பது எனது நம்பிக்கை.

உடல் ஆரோக்கியத்திலும் உள்ள ஆரோக்கியத்திலும் அவரவர் குடும்பமும் சரியாக நடந்து கொள்ள வேண்டும். என் குடும்பத்தார் அதைச் சரியாகப் பின்பற்றுகின்றனர்.

இலேசான இருமல், தலைவலி என்றாலே உடனே மருத்துவமனைக்குக் கிளம்பிவிடுவதில்லை. அது எதனால் என்கிற விவரத்தைப் புரிந்து கொண்டு கஷாயமோ, கைவைத்தியமோ செய்து பார்ப்போம். ஒரு நாள் முழுதும் கடுமையான காய்ச்சலால் அவதிப்பட்ட என் மகன், கஷாயத்தால் குணம் அடைந்ததைப் போன்ற அனுபவங்களும் உண்டு.

பொதுவாக நாம் என்ன நினைக்கிறோம்? 'உடம்பு சதை போடுகிறதா- அதற்கான உடற்பயிற்சி, டயட் முறைகள். நோய் வருகிறதா-அங்கே போக வேண்டும், இங்கே போக வேண்டும்' என்ற முடிவுகளை உடனடியாக மேற்கொண்டு நம் உடலோடு நாமே ஒரு யுத்தம் நடத்துகிறோம்.

இயற்கையான வாழ்வு வாழ்ந்து வந்தாலே போதும்; உடல் ஆரோக்கியம் நிச்சயம்!

சந்திப்பு : **ஆதித்ய சோழன்**

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**



3.11.2006 இதழின் போஸ்ட் கார்டு கதைப் போட்டிக்கு உங்களிடமிருந்து இப்படியொரு வரவேற்பை நாங்கள் எதிர்பார்க்கவில்லை. தலா ரூ.250/- பரிசு பெறும் தேர்ந்தெடுக்கப்பட்ட எட்டு கதைகளில், இந்த இதழில் மூன்று கதைகள் பிரசுரமாகியுள்ளன. மற்றவை அடுத்தடுத்த இதழ்களில்...

அந்த விளம்பரம் கொடுத்ததை மீறி ஏற்கெனவே நேர்காணலுக்காக அனுப்பியிருந்த கடிதத்தின் அடிப்படையில் அன்றைய தினம் சுமார் எழுபதுபேர் ஆஜர் ஆகியிருந்தனர்.

மேலாளரை அழைத்த முதலாளி, "இன்று வந்துள்ளவர்கள் பெயர் மற்றும் விலாசங்களைச் சேகரித்துக் கொள்ளுங்கள். இவர்களைத் தவிர்த்து மற்ற விண்ணப்பதாரர்களுக்கு அடுத்த வாரம் இதே கிழமையில் நேர் காணலுக்கு வரச் சொல்லி கடிதம் அனுப்பிவிடுங்கள்."



# நிமிடத்துக்கு நிமிடம்!

எஸ்.ராஜேந்திரன்

மானேஜர் குழம்பிப்போய் முதலாளியைப் பார்த்தார்.

"புரியவில்லையா? இன்று நேர்காணல் ஒத்தி வைக்கப்பட்டுள்ளதாக பல தினசரிகளில் விளம்பரம் கொடுத்தும் இத்தனைபேர் இன்று வந்துள்ளார்கள் என்றால், இவர்களில் யாருக்கும் தினசரி நாளிதழ்களை வாசிக்கும் பழக்கம் இல்லை. நிமிடத்துக்கு நிமிடம் பல்வேறு மாற்றங்களுக்கு உள்ளாகி வரும் இன்றைய உலகில் இப்படிப்பட்டவர்கள் நமது நிறுவனத்துக்கு ஏற்றவர்களாக இருக்க முடியாது! மீதமுள்ளவர்களில் நமக்கு வேண்டியவர்களைத் தேர்வு செய்து கொள்வோம்'' என்றார், முதலாளி.

உளர்த் தலைவர் மூலம் அமைச்சரிடம் லெட்டர் வாங்கியிருந்தேன். அப்பாவையும் அழைத்துக் கொண்டு ஓ.பி. சீட்டு வாங்கி வரிசையில் நின்றாயிற்று.

அப்பா உட்காரக் கூட முடியாத தொடர் வயிற்று வலியில் துடித்துக் கொண்டிருந்தார்.

வரிசைப் பிரகாரம் நான்காவது ஆளாக நாங்கள் செல்ல வேண்டும்.

நான் சென்னையிலிருந்து ஆபீஸ் விஷயமாக புது டெல்லி போய்விட்டு, விமானத்தில் திரும்பி வந்து கொண்டிருந்தேன். பக்கத்து ஸீட்டில் ஒருவர் பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். அவரிடம் பேச்சுக் கொடுக்க எண்ணி "சார்... பேப்பரில் என்ன விஷயம்?'' என்று கேட்டேன். அவர் பேப்பரை என்னிடம்



# முன்னே பின்னே...

முத்தம் செல்வகுமார்

திடீரென்று இரண்டு வெள்ளை வேட்டி மனிதர்கள் வலி தொந்தரவோ, விபத்து காரணமோ எதுவும் இல்லாத சிரித்த முகத்துடன் உடன் வந்தவர்களுக்குக் கட்டளைகள் பிறப்பித்துக் கொண்டு, எங்களை எல்லாம் அலட்சியப்படுத்திவிட்டு உள்ளே சென்றனர்.

என் தந்தையின் உடல் உபாதையையும் அவர்களுடைய செயலையும் கண்டு பொருமினேன். அப்பா என்னிடம் கேட்டார்: "என்னடா இது நமக்கு முன்னே போறாங்க...?"

"இல்லப்பா... ஏதோ பெரிய இடத்து சிபாரிசு போல இருக்கு... உட்கார்ந்திருந்தவரு கட்சிக்காரராம் அதாம்பா... கொஞ்சம் பொறுப்பா... போயிடலாம்... நம்ம கிட்டயும் லெட்டர் இருக்குல்லப்பா...

அப்பா சொன்னார்: "லெட்டரைக் காட்டாத.. டாக்டருங்க எப்பவும் கவனிக்குற மாதிரியே வரிசையாவே பார்க்கட்டும். இப்ப நம்மளவிட ஒருத்தன் பெரிய ஆளா இருக்காங்கறபோது நாம முன்னபோக முடியல. நமக்குச் சுருக்குங்குது. நாமளும் நாலு பேரை முந்திக் கிட்டுப் போனா நம்மள அந்த நாலு பேர் திட்டுவாங்க. அவங்க மனசும் நம்மள போலத்தான் கஷ்டப்படும். பொறுமையாவே போலாம்பா."

---

கொடுத்துவிட்டு, அரசியல், நாட்டு நடப்பு, குண்டுவீச்சு என்று பல விஷயங்கள் பேசினார். எனக்கு அவரைப் பார்க்க ஆச்சர்யமாயிருந்தது. இத்தனை உலக ஞானமா! "சார், நீங்கள் சென்னையில் எங்கு தங்கியிருக்கிறீர்கள்?" என்றேன்.

"தி.நகரில்" என்றார்.

"அப்படியா, நானும் தி.நகரில்தானிருக்கிறேன். அங்கு எந்த இடம்?"

"ஜெகதீசன் தெரு."

"அட, நானும் ஜெகதீசன் தெருவில் தானிருக்கிறேன்."

"அங்கே எந்த ஃபிளாட்?

"கோகுலம் ஃப்ளாட்டில் ஏழாம் நம்பர்."

"நான் இரண்டாம் நம்பரில் இருக்கிறேன். என் பெயர் ஸ்ரீநிவாசன்."

"நான் ஜான் டேவிட்."

இருவரும் கைகுலுக்கிக் கொண்டார்கள்.

# நாம் இருவர்...

ருக்மிணி கிருஷ்ணமூர்த்தி



# பிறை முழு நிலவும்

## சுதா சேஷய்யன்

"அம்மா! உன்னுடைய திருமுகத்தை நான் பார்க்கிறேன். இரண்டு சந்திரன்கள் அங்கே இருக்கின்றன'' என்பார் ஆதிசங்கரர், அம்பாளிடம். எப்படி இரண்டு சந்திரன்கள் என்றால், ஏற்கெனவே ஒன்று இருக்கிறது - தாரா நாயக சேகராம் என்று தியான சுலோகத்தில் வருகிறதல்லவா? தாரா நாயகன் என்றால் நட்சத்திரங்களுக்கெல்லாம் நாயகனான சந்திரன் என்று அர்த்தம். ஏற்கெனவே அவன் திருமுடியிலே ஒரு சந்திரன் இருக்கிறது. அம்பாளைப் பார்த்து விட்டு ஆதிசங்கரர் சொன்னார், "இரண்டு நிலாக்கள்'' என்று. "இரண்டு நிலாக்கள் கூட அல்ல... ஒரு நிலாவின் இரண்டு பாகங்கள்" என்கிறார்.

எப்படியென்றால், "உன் திரு நெற்றியைப் பார்க்கிறேன், அதைப் பார்க்கும்போது, உன் திருமுடியிலே ஒரு நிலா இருக்கிறதே, அதன் இன்னொரு பாதிதான் உன் நெற்றியிலே வந்து அமர்ந்ததோ என்று தோன்றுகிறது'' என்கிறார்!

முழுசாக இருக்கிற நிலாவில் ஒரு பாதி அவள் திருமுடியிலும், இன்னொரு பாதி அவள் திருநெற்றியில் அஷ்டமி சந்திரனாகவும் (எட்டாம் பிறை) இருக்கிறது.

இதைச் சொல்லிவிட்டு ஆதிசங்கரர் சொல்கிறார்: "ஆனால் இந்த இரண்டு நிலவுகளும் திசை மாறி இருக்கின்றன. இரு பாதிகளும் ஒன்றையொன்று நோக்காமல் மாறு திசைகளில் நோக்குகின்றன. பேசாமல் மேலே இருப்பதை எடுத்துக் கொண்டு வந்து கீழே வைத்துத் தைத்து விட்டால் முழு நிலா கிடைக்குமே'' என்றார். சொல்லிவிட்டு, எப்படித் தைப்பது என்பதையும் சொன்னார்: "அமிர்தம் இருக்கிறதல்லவா...? அந்த அமிர்தம் என்கிற பசையை எடுத்து ஒட்டிவிடலாம்!'' என்றார்.

ஒட்டியது பிரிந்து வந்தால் என்ன செய்வது? "ஆகவே அந்த அமிர்தத்தையே கயிறாக மாற்றி இரண்டு பாதிகளையும் சேர்த்து, தைத்துவிட்டால் இந்த இரண்டும் சேர்ந்து மகாபூர்ணிமையாக அந்தத் திருமுகம் விளங்காதா?'' என்றார்.

இது எங்கேயிருந்து ஆசார்யருக்கு (சௌந்தர்யலஹரியில்) தோன்றியிருக்கிறது என்றால், **அஷ்டமி சந்திர விப்ராஜ** என்ற லலிதா சஹஸ்ரநாமத்தின் திருநாமத்திலிருந்துதான்.

### கஸ்தூரி திலகம்

பிறைச் சந்திரன் என்கிறபோது நான்காம் மூன்றாம் பிறை எனில் அதில் நடுவிலே ஒரு பள்ளம் இருக்கும். அதனால்தான் அஷ்டமி சந்திரன் என்று வர்ணித்தார்கள். அமாவாசையிலிருந்து பௌர்ணமி வரையிலான காலகட்டத்தில் சரியாக நடுவில் இருக்கக் கூடிய எட்டாவது நாள் சந்திரன். அது எப்படி சரி பாதியாக இருக்குமோ அப்படிப்பட்ட கச்சிதமான அமைப்பிலான திருநெற்றி.

அதுவும் அது சாதாரண திருநெற்றி இல்லை- **அஷ்டமி சந்திர விப்ராஜ அலிகஸ்தல ஷோபிதா**

அம்பாளுடைய திருநெற்றியில் என்ன வாகியிருக்கிறது... நெற்றியில் முன்னாலிருக்கக் கூடிய கூந்தல் கற்றைகள் சுருண்டு சுருண்டு வந்திருக்கின்றன. அதுதான் அளகம் - அலிக ஸ்தல கூந்தல்கள் விளையாடும் ஸ்தலம்! அந்தத் திருநெற்றியில் கஸ்தூரி மானிலிருந்து

கிடைக்கக் கூடியதான கஸ்தூரி திலகத்தை அம்பாள் அணிந்து கொண்டிருக்கிறாள் என்பதால் **முக சந்திர களங்காப ம்ருக நாபி விசேஷகா** என்ற திருநாமம்.

ம்ருகம் என்று சொன்னாலே மான் - கஸ்தூரிமான். அதனிடமிருந்து கிடைக்கக் கூடிய கஸ்தூரியைத் திலகமாக அணிந் திருக்கக் கூடிய அம்பாள். அவளுடைய ஸ்வரூப வர்ணனை திருநெற்றி, திருமுகம், திருவடி என்று தொடர்ந்து, அவளுடைய ஸ்வரூப ஸௌந்தர்யத்தினால் எப்படி அனுக்ரஹத்தைத் தருகிறாள் என்பதை வர்ணித்துக் கொண்டே வருகிறது. ரொம்ப அழகான அந்த வர்ணனையில் ஒன்றி ரண்டை மட்டுமே இங்கே பார்ப்போம்.

## அம்புரா தூணி

**இந்த்ர கோப பரிக்ஷிப்த ஸ்மரதூணாபஜங்கிகா**

மன்மதன், அம்பாள் கையில் இருக்கிற அதே மலர் அம்புகளை வைத்திருக்கிறான் என்று பார்த்தோம். சாதாரணமாக, அம்பு களை வைக்க அம்புரா தூணி இருக்கும்.

மன்மதனின் அம்புரா தூணி எங்கே இருக்கிறதென்றால், அம்பாளுடைய திருக்கால்கள்தான் அம்புரா தூணியாக இருக்கின்றன.

**ஸ்மரதூணா பஜங்கிகா.** ஜங்கிகம் என்ற பகுதி, முழுங்கால்களுக்குக் கீழே இருக்கக் கூடிய பகுதி. முழுங்கால்களுக்கு ஜானு என்று பெயர். ஜானு என்ற இலத்தின் சொல்லிலிருந்துதான் ஆங்கில மொழியில் ஜீனு என்று வந்தது. - இதுதான் விஞ்ஞான ரீதியான பெயர். சமஸ்கிருதமும் இன்றைய ஐரோப்பா, ஈரானில் வழங்கக் கூடிய மொழிகளும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் என்பதால் இப்படித் தொடர்புகள் இருக் கும்.

அம்பாளின் முழுங்கால்களுக்குக் கீழே இருக்கக் கூடிய பகுதியானது மன்மதனின் அம்புரா தூணியாக இருக்கக் கூடிய பகுதி என்பதை ஆசார்யர் இன்னும் விரிவு படுத்திக் கொண்டே போவார்.

சாதாரணமாக அம்புரா தூணியில் அம்பை எப்படி வைத்திருப்பார்கள் என்றால், அதன் கூர்மையான பகுதி கீழ்நோக்கி இருக்கும். ஆசார்யர் என்ன சொல்கிறார் என்றால், 'அம்பாளுடைய திருக்கால்களான அம்புரா தூணியில் கீழ்நோக்கிப் பொருத்தப்பட்டுள்ள அம்பு கள், அந்தத் தூணியைத் தாண்டி வெளியே வந்துள்ளன; அந்த அம்புகளின் கூர்மையான பகுதிதான் அம்பாளுடைய திருப்பாதங்களிலுள்ள ஐந்து விரல்களின் நகங்கள்' என்கிறார்!

இதைச் சொல்லிவிட்டு இன் னொன்றும் சொன்னார். மன்மதன் தனது அம்புகளைக் கூர்மையாக்குவதற்காக- சாணை பிடிக்க-ஒரு வழி கண்டு பிடித் தானாம்!

அம்பாளிடம் 'பரமேச்வரி! உன்னு டைய திருப்பாதங்களில் முப்பத்து முக் கோடி தேவர்கள் வந்து வணங்கு கிறார்கள். அவர்களுடைய தலையிலே உள்ள கிரீடங்களிலெல்லாம் அந்த அம்பு கள் பட்டு பட்டுக் கூர்மையாகிவிடு கின்றன-சாணை தீட்டப்பட்டுவிடு கின்றன என்று சொல்கிறார், ஆசார்யர்.

உருவமே இல்லாமல் இருக்கக் கூடிய அந்த மன்மதனுக்குக் கூட - அவன் வெற்றிபெற வேண்டும் என்பதற்காக தன்னுடைய அனுக்கிரஹத்தைத் தரக்கூடி யவள்-தன் திருக்கால்களையே அவனுக்கு அம்புரா தூணியாகக் கொடுத்திருக்





கிறாள்.

## சொல் கடந்த செளந்தர்யம்

இப்படி எல்லாவித அழகுகளும் சேர்ந்து அம்பாளிடத்தில் குடிகொண்டிருப்பதாகச் சொல்வதற்காகத்தான் ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்தில் ஸ்வரூப வர்ணனையின் கடைசி திருநாமமாக **ஸர்வ லாவண்ய சேவதி** என்று வருகிறது.

அம்பாளின் அழகுகளை ஒவ்வொன்றாக விவரித்துப் விவரித்துப் பார்த்தும் முழுமையாகச் சொல்ல முடியவில்லை. எல்லாவித அழகுகளும் பொருந்தியவளாகச் சேர்ந்து பொருத்தி ஓர் இடத்தில் குடியிருந்தால் எப்படி இருக்குமோ, அப்படி அழகுகளின் களஞ்சியமாக விளங்கக் கூடியவள் அவள்! ஸர்வ லாவண்யம்!

**அம்பாளின் அழகுகளை ஒவ்வொன்றாக விவரித்துப் பார்த்தும் முழுமையாகச் சொல்ல முடியவில்லை.**

– இதுவரை ஸ்வரூப வர்ணனையான திருநாமங்கள்.

இதற்கப்புறம் வரக்கூடிய திருநாமங்கள் அம்பாள் எங்கே வீற்றிருக்கிறாள் என்பதைச் சொல்லக் கூடிய திருநாமங்கள்.

**சிவகாமேசுவராங்கஸ்தா** – காமேசுவரி என்றுதான் அம்பாளுக்குத் திருநாமம். அந்தத் திருநாமத்துக்கு என்ன காரணம் என்பதை ஏற்கெனவே பார்த்தோம். நமது ஆசைகளைப் பூர்த்தி செய்யக் கூடியவள். ஜகத் சிருஷ்டி நடக்க வேண்டும் என்பதற்காக, தானே அருண வர்ணத்தில் அவதரித்தவள் – அதனால் காமேசுவரி என்ற திருநாமம்.

இந்த ஜகத் சிருஷ்டி நடைபெற வேண்டும் என்பதற்காக சாக்ஷாத் பரமேசுவரனாக இருக்கக் கூடிய பரமாத்மாவுக்கும் காமேசுவரன் என்று திருநாமம்.

**சிவ காமேசுவரா அங்கஸ்தா.** காமேசுவரியாகிய அம்பாள் எங்கே வீற்றிருக்கிறாள் என்றால், சிவகாமேசுவரனாக இருக்கக் கூடிய தனது பர்த்தாவின் (நாயகனின்) திருத் தொடையில்



வீற்றிருக்கிறாள்.

இதற்கு என்ன விளக்கம் என்பதை இன்னும் இரண்டு மூன்று திருநாமங்களுக்குப் பிறகு பார்ப்போம்.

(தொடரும்)

# நான்... அவள்... அது...

"நம்மகிட்ட வேலை செஞ்ச செல்வராஜ்கிட்ட கைமாத்து வாங்கினீங்களா, உங்களுக்குச் சங்கடமாக இல்லியா?"

"சங்கடமாத்தான் இருக்கும்மா" என்று ஒப்புக் கொண்டேன்.

"என்ன செய்றதும்மா, ரெண்டாந் தேதியோ, மூணாந் தேதியோதான் அக்காட்டயிருந்து டிடி வரும். இன்னிக்கு முப்பத்தொண்ணு."

"ஒரு மூணு நாள் அட்ஜஸ்ட் பண்ணிக்க முடியாதா? அவன் நம்மளப் பத்தி என்ன நெனப்பான்!"

"ஒண்ணும் நெனைக்க மாட்டான். அவன் ஒரு விசுவாசமான ஊழியனாயிருந்தவன். இப்ப வேற ஒரு வேலையில் நல்லா சம்பாதிக்கிறான். மூணு நாள்ல நான் திருப்பிக் குடுத்துருவேன்னு அவனுக்குத் தெரியும். இது ஒரு எமர்ஜென்ஸின்னும் அவனுக்குத் தெரியும்."

"அப்படி என்னங்க எமர்ஜன்ஸி?"

"நேத்தே சொன்னேன்ல, க்ளப் மீட்டிங்ல மெம்பர்ஸ் எல்லாம் ஆளுக்கு ஆயிரம் ரூவா குடுக்கணும்னு சொன்னாங்கன—ஆர்ஃபனேஜ் ப்ராஜக்ட்க்காக..."

"அதுசரி. ஒங்க க்ளப் மெம்பர்ஸெல்லாம் வசதியானவங்க. நமக்கு இது இப்பப் பெரிய தொகையில்லியா! இந்த க்ளப்பே நமக்கு இப்ப லக்ஷரிதானேங்க! நாம நொடிச்சுப் போனவங்கன்னு ஒங்க க்ளப் மெம்பர்ஸுக்குத் தெரியுந்தானேங்க?"

"தெரியுந்தான். ஆனாலும் என்னை ஓரங்கட்டிடாம மரியாதை குடுத்து வச்சிருக்காங்க. நொடிச்சுப் போனவன்னு நெத்தியில லேபிள் ஒட்டிக்கிட்டு அலைஞ்சேன்னா, அப்புறம் க்ளப்ல ஒரு பய நம்மள மதிக்க மாட்டான். இந்தக் கஷ்ட காலம் இன்னும் ரெண்டு மாசமோ, மூணு மாசமோதான். சினிமா ப்ரொடியூஸர்ஸ் மூணுபேர்ட்ட கதை சொல்லியிருக்கேன். அதுல ஒண்ணு க்ளிக் ஆனாக்கூட போதும், ஐயா எங்கேயோ போயிருவார். எதப்பத்தியும் நீ கவலைப்படாம ரிலாக்ஸ் பண்ற. ஈவ்னிங் ரெடியாகி நாம ரெண்டு பேரும் க்ளப் மீட்டிங்குக்குப் போறோம். ஓகே மேடம்?"

'ஓகே பாஸ்' என்று எழுந்து கொண்டவள், செல்லமாய் என் தலை முடியைச் சிலுப்பிவிட்டு கிச்சனுக்குள் புகுந்து கொண்டாள்.

நொடித்துப் போனவன்! பத்து மாசம் முன்பு வரை, மூவாயிரம் சதுர அடியில் மாசம் எழுபதாயிரம் வாடகையில் அண்ணாநகரில் ஓர் ஏஸி டிபார்ட்மென்டல் ஸ்டோரின் உரிமையாளன்.

இன்றைக்கு, நொடித்துப் போனவன்! வீடு, கார், எல்லாவற்றையும் விற்று, மார்வாடிக் கடன்களை அடைத்துவிட்டு, வருமானமில்லாமல், ஒரு ஸிங்கிள் பெட்ரூம் வாடகை ஃப்ளாட்டில் இப்போது வாசம். மும்பையிலிருக்கிற அக்கா, தன்னுடைய டாக்டர் சம்பாத்தியத்தில், அத்தானுக்குத் தெரியாமல் மாசாமாசம் அனுப்புகிற தொகையில் வாழ்க்கை ஓடிக் கொண்டிருக்கிறது. இந்தச் சாபத்திலிருந்து மீண்டு, தம்பி எப்படியும் மேலே வந்து விடுவான் என்பதில் அக்காவுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை.

சாயங்காலம் ஆட்டோவில் போகிற போது நம்ம ஆள் ரொம்ப ஆனந்தமாயிருந்தாள். 'இன்னும் ரெண்டு மாசமோ, மூணு மாசமோதான், ஐயா எங்கேயோ போயிருவார்' என்று காலையில் நான்

ஏ.ஏ.ஹெச்.கே.கோரி

சொன்னதில் பூரண விசுவாசத்தோடி ருக்கிறாள். ஆண்டவனே, இவளுடைய-என்னுடைய நம்பிக்கைகளை நிறைவேற்றி வை.

குரலில் உற்சாகம் கொப்பளித்தது. என் பக்கத்தில் இன்னும் நெருங்கி, என் காதருகில் கேட்டாள், "ஆமா, என்னோட தலைவர் எப்ப ப்ரஸிடென்ட் ஆகப் போறாராம்?"

ப்ரஸிடென்ட்! ரெண்டு வருஷத்துக்கு முந்தியே என்னைத் தேர்ந்தெடுத்து வைத்திருந்தார்கள். பதவியேற்பதற்கு மூணு மாசங்களுக்கு முந்திதான் வியா பாரத்தில் தொய்வு ஏற்பட்டுக் கொண்டி ருப்பது உறைக்க ஆரம்பித்தது. இந்தத் தருணத்தில் சங்கத்தின் தலைவர்



"குதிரையேற்றம், மல்யுத்தம், வாள் பயிற்சி போன்றவை கடினமாக இருக்கின்றன என நமது இளவரசர் கூறுகிறார் மன்னா...?"

''அப்படியானால் அப்பயிற்சிகளுக்கு கரஸ்பாண்டன்ஸ் கோர்ஸ் எங்காவது உண்டா என்று விசாரியுங்கள், அமைச்சரே..!''

– பொ.மாரிமுத்துக்குமார்



பதவியையெல்லாம் எடுத்துக்கொள்வது சரிப்பட்டு வராது என்று, பாபுவிடம் விண்ணப்பம் வைத்து, அவரைத் தலைவராக்கிவிட்டேன். அதன் பிறகு சுந்தரம், இந்த வருஷம் மோகன், அடுத்த வருஷம் அனந்தகிருஷ்ணா.

அனந்தகிருஷ்ணாவையடுத்து நான் தான் என்று அதிகாரபூர்வமில்லாத தகவல்கள் தெரிவிக்கின்றன. இனியும் நான் கழ்ண்டு கொண்டிருந்தால் க்ளப்பிலிருந்தே கழட்டி விட்டுவிடுவார்கள்.

ஆனது ஆச்சு, இன்னும் ஒரு மூணு மாசம் மூச்சைப் பிடித்துக் கொண்டிருந்தால் சினிமாவில் முத்திரை பதிக்க ஆரம்பித்து விடுவேன். கதாசிரியனாக உள்ளே நுழைந்து, பாடலாசிரியனாக ஓர் அவதாரமெடுக்கவும் திட்டமிருக்கிறது. இப்பவெல்லாம் சினிமாவில் பாட்டா எழுதுகிறார்கள்? ஐயா எழுத ஆரம்பித்தால்தான் பட்டுக்கோட்டை, கண்ணதாசனுடைய பொற்காலம் மீண்டும் தமிழ் சினிமாவில் விடியும். இப்படியே கொஞ்சம் கொஞ்சமாய்த் தமிழ் சினிமாவை ஆக்கிரமித்து... யார் கண்டது. நான் இந்த க்ளப்புக்கு ப்ரஸிடென்ட்டாய் ஆகிறபோது ஒரு சினிமா டைரக்டராகவும் ஆகியிருப்பேன்! இந்த க்ளப்பின் மற்ற உறுப்பினர்களுக்கு இணையாகப் பொருளாதாரத்தில் மீண்டும் உயர்ந்திருப்பேன். இதை இவளிடம் சொன்னபோது என் முதுகில் தட்டினாள்.

நட்சத்திர ஹோட்டல் போர்ட்டிகோவில் ஆட்டோவில் போய் இறங்குவது அழகாயிருக்காது என்று வெளியிலேயே இறங்கிக் கொண்டோம்.

மீட்டிங் முடிவுக்கு வருகிற தருவாயில், சங்கத்தின் பொருளாளர் எழுந்து, ஒவ்வொருவரிடமும் ரூபாயை நினைவு படுத்தியபடி ஆசனம் ஆசனமாக வந்தார். சிலர் தயாராகக் கொண்டு வந்திருந்த செக்கை எடுத்து நீட்டினார்கள். சிலர் சலவை நோட்டுகளை எடுத்துக் கொடுத்தார்கள். சிலர் "அடுத்த மீட்டிங்ல குடுத்துர்றேன் சார்" என்றார்கள்.

நான் என்னுடைய பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்துக் கொண்டேன். பொருளாளர் என் ஆசனத்தை நெருங்கினார்.

"ஹலோ சார்" என்றவர், என்னிடம் பணம் கேட்காமல் என்னைக் கடந்து சென்றார். அடுத்து உட்கார்ந்திருந்தவரிடம் "ராஜேந்தர், நீங்க தவ்ஸண்ட் ருப்பீஸ் தரணும்- ஆர்ஃபனேஜ் ப்ராஜக்ட்க்கு. கேஷா தர்றீங்களா, செக்கா?" என்றார்.

''என்ன சார் இது, அவர விட்டுட்டீங்க, என்ட்ட வந்து கேக்கறீங்க!" என்ற ராஜேந்தரிடம் பொருளாளர் சொன்னது சுற்று வட்டாரத்தில் துல்லியமாகக் கேட்டது.

"அவரே பாவம்... கஷ்டப்பட்டுட்டிருக்கார். அவர்ட்ட கேக்க வேண்டாம், விட்டுருவோம்னு ப்ரஸிடென்ட் சொல்லிட்டார் ராஜேந்தர். ரொம்ப

ப்ரஷர் குடுத்தா களப்ப விட்டு ஓடிப் போனாலும் போயிருவார்."

சுற்றிலும் சில முகங்கள் சிக்கனமாகச் சிரித்தன. என்னுடைய முகத்தில் சில வினாடிகளுக்கு முன்பு கருக்கொண்டிருந்த புன்னகை இப்போது செத்துக் கொண்டிருந்தது.

என்னுடைய கையின்மேலே இன்னொரு கை படர்ந்து அழுத்தியதை உணர்ந்தேன்.

இவள். அந்தப் பக்கம் பார்வையைத் திருப்ப எனக்குத் திராணியில்லை.

மீட்டிங் முடிந்தது.

பெண்கள் ஸூப்பின் பக்கமும், ஆண்கள் கோப்பைகளின் பக்கமும் நகர்ந்தார்கள். போகலாமா என்றேன்- அவள் பக்கம் திரும்பாமலேயே.

"ம்" என்று சம்மதம் தந்தாள், என் புஜத்தைப் பற்றியபடி.

வெளியே வந்தோம். உற்சாகமாக முதுகைத் தட்டினாள்.

''காலத்துக்கேற்ப நாம மாறிக்குவோம்ங்க" என்று கூறி, நின்றிருந்த ஆட்டோவில் என் கையைப் பிடித்துத் தள்ளி, கலகலவெனச் சிரித்தாள். ஆட்டோ புறப்பட்டது.



''நள்ளிரவில் கபாலிக்கு எதுக்கு எஸ்.எம்.எஸ். அனுப்பறீங்க?"

''தொழில் சிறக்க மாமூல் வாழ்த்து அனுப்பறேன்!"

- அம்பை தேவா





# போட்டி போட்ட புன்னகை!

திரைப்பட, தொலைக்காட்சி நடிகை அப்ஸராவுடனான நமது ஷாப்பிங், பாண்டிபஜாரில் ஆரம்பித்தது. சரவணபவனில் சாப்பிட்டு, யுனிவர்செல்லில் லேட்டஸ்ட் மாடல் செல்போன்களின் விலையை விசாரித்துவிட்டு, சாலையோரக் கடைகளின் பொம்மைகளைக் கொஞ்சிவிட்டு அப்ஸரா நுழைந்தது 'நாராயணா பேர்ல்ஸ்' ஷோரூமில். அம்மணிக்கு அங்கே பலத்த வரவேற்பு, உபசரிப்பு...

"உங்கள சினிமாவுல பார்த்தோம். டீ.வி.யில பார்த்திருக்கோம்..." என்று ஆளாளுக்குச் சூழ்ந்துகொண்டனர். எல்லாருக்கும் பொறுமையாகப் பதில் சொல்லி விட்டுத் தம்முடைய செலக்ஷன் திருவிழாவை ஆரம்பித்தார்.

"மொத்தமாப் பார்க்கறப்ப எதை செலக்ட் பண்றது, எதை விடறதுன்னே தெரியல... நீங்களே சொல்லிடுங்க, எந்த மாதிரியான ஜுவல்ஸ் உங்க கடையில இருக்கு?" என்றார் கடையிலிருந்தவர்களிடம்.

"கோல்டு வேக்ஸ் ஜுவல்லரி, ஆக்ஸிடைஸ்ட் ஜுவல்லரி, ரூபீஸ், எமரால்டு அண்டு புளூ சஃபையர் நெக்லஸ் செட், வளையல், ஸ்டட்னு நிறைய ஐட்டம்ஸ் இருக்கே" என்ற விற்பனையாளர்கள் "நீங்க எந்த மாதிரியான நகைகளை விரும்பி அணிவீங்க?" என்று கேட்க,

"எனக்கு ரொம்பப் பிடிச்சது வளையல்கள்தான்!" என்றவர் ஃபேன்சி வளையல்களை எடுத்துப் பார்த்தார்.

அவருடைய ஆர்வத்தைப் பார்த்தனர் பணியாளர்கள். அடுத்த விநாடியே விக்டோரியா செட், செரியன் ஃப்ளவர் செட், பிரேஸ்லெட், மாட்டல் என்று எல்லாவிதமான லேட்டஸ்ட் ஐட்டங்களும் அவர்

முன் பரப்பப்பட்டன. ஆசையோடு அவர் பார்த்துக்கொண்டிருக்கும் போதே,

"அள்ளித் தந்த வானம்' படத்துல தமிழ்க் கிறுக்கனா வர்ற விவேக்கோட நீங்க செய்த காமெடி ரொம்ப சூப்பர்ங்க" என்றார் கடைப் பெண்மணி ஒருவர்.

"தேங்க்ஸ்" என்ற அப்ஸரா, ஒரு நெக்லஸைக் கழுத்தில் அணிந்து கண்ணாடி முன் நின்று அழகு பார்த்தார்.

"வேறென்ன படங்கள்ல நடிச்சிருக்கிங்க?"

"சார்லி சாப்ளின், சூரி படங்களில் பண்ணியிருக்கேன் என்ற அப்ஸராவின் கண்களில் கண்ணாடிப் பெட்டிகளில் வைக்கப்பட்டிருந்த ராசிக் கற்கள் பட்டு விட, தமது சந்தேகத்தைக் கேட்டார்.

"ராசிக் கற்களை சாதாரணமா யூஸ் பண்ணக்கூடாதே... அப்புறம் எப்படி?"

"அதுக்காகத்தான் எப்பவும் எங்க கடைல ராசிக்கல் நிபுணர் இருக்காரு" மேனேஜரிடமிருந்து உடனே வருகிறது பதில்.

"சரி டி.வி.ல எந்தெந்த சீரியல்ல நடிச்சிருக்கிங்க?"

"மனைவி, சலனம், ராஜராஜேஸ்வரி பண்ணியிருக்கேன். இந்த வருடம் ப்ளஸ் டூங்கிறதால சினிமாவுல கமிட் ஆகாம இருக்கேன்" என்ற அப்ஸரா,

"உங்க கடை பாண்டிபஜார்ல மட்டுந்தான் இருக்கா, பிராஞ்ச் உண்டா?" என்றார்.

"பாண்டிபஜார்ல மூணு, அடையார்ல ஒண்ணு, அண்ணாநகர்ல ஒண்ணுன்னு மொத்தம் அஞ்சு கடைகள் இருக்கு" என்ற மேனேஜர், "ஜுவல்லைப் போட்டுப் பாருங்க, மேடம்" என்றார்.

ஒவ்வொன்றாக அப்ஸரா அணிந்து காட்டியபோது கடையில் 'சூப்பர்', 'அட்டகாசம்' எனக் குரல்கள் எழுந்தன. ஒவ்வொரு பாராட்டுக்கும் அப்ஸரா அழகாக வெட்கப்பட்டார்.

ஷாப்பிங்கை முடித்து 'நாராயணா பேர்ல்ஸி'லிருந்து கிளம்பிய அப்சராவைக் கடைப் பெண்கள் சூழ்ந்து கொண்டு விவேக்குடன் அவர் செய்த காமெடியை நடித்துக் காட்டக் கூறினர். அப்ஸரா செய்து காட்ட, எல்லோரும் கைதட்டி அவருக்கு வாழ்த்து கூறினார்கள். அப்ஸரா விடைபெற்ற போது உதிர்த்த புன்னகை, அங்கிருந்த முத்துக்களோடு போட்டி போட்டுப் பளிச்சிட்டது.

- நிதர்சனா

படங்கள்: ஸ்ரீஹரி





# ஆனந்தம்

**சா**ந்தம் என்பது என்ன? சலன மில்லாமல் தனக்குள்ளேயே அடங்கி யிருப்பதுதான். மனசின் ஆனந்தம் இன்னொன்றைச் சார்ந்தே விளை கிறது என்பதால்தான் சலனம். அந்த இன்னொன்றை நோக்கி மனசு சென்றுகொண்டேயிருக்கிறது. அப் போது 'சாந்தம்' என்பதாகத் தனக் குள்ளேயே அடங்கியிருக்கும் நிலை ஏற்பட முடியாமலிருக்கிறது. ஆத்மா வுக்கோ 'இன்னொன்று' என்று வெளியே எதுவுமே தெரியாமல் தன் னிலேயே அது ஆனந்திப்பதால், அப் போது தனக்குள்ளேயே அடங்கியிருப் பதன் சாந்தமும் கிடைக்கிறது.

மனசுக்கு அதீத சக்திகள் உண் டாகும்போது, அது அமானுஷ்ய ஆற் றல்களைப் பெறும்போது, மனுஷ சக்திக்கு மேற்பட்ட கந்தர்வர்கள், பித் ருக்கள், தேவர்கள் ஆகியவர்களுக் குப் படிப்படியாக ஒருவரைவிட இன்னொருவருக்குப் பலமடங்கு ஆனந்தம் சித்திக்க முடியும் என்று தெரிகிறது. இப்படி வரிசையாக ஒன் றுக்கு மேல் ஒன்றான ஆனந்தங்கள் தைத்திரீய (உபநிஷ)த்தில் "ஆனந்த வல்லீ" என்றே பெயருள்ள அத்யாயத் தில் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த ஆனந்தங்கள் என்ன என்று மனுஷனுக்குப் புரியாது. காபி சாப் பிடுவதிலும், கச்சேரி கேட்பதிலும் மனுஷனுக்கு என்ன ஆனந்தம் என்று ஒரு மாட்டுக்குப் புரியுமா? அப்படித் தான் இதுவும். இப்படிப்பட்ட பல ஆனந்தங்களின் முடிந்த முடிவான உச்சஸ்தானம்தான் ஆத்மானந்தம்!

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



# கோகுலம் சூப்பர் கையெழுத்துப் போட்டி



**க**ல்கி நிறுவனத்திலிருந்து வெளியாகும் 'கோகுலம்' சிறுவர் இதழ் வெள்ளி விழா ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது. சிறுவர்களின் கற்பனை வளத்துக்கும் அறிவுத் திறனுக்கும் அவ்வப்போது பல்வேறு போட்டிகளை நடத்தும் கோகுலம், புதிதாக ஒரு போட்டியை அறிவிக்கிறது.

குழந்தைகளின் கையெழுத்துத் (Hand Writing) திறனை வளர்க்கும் பொருட்டு நடத்தப்படும் இந்த **'சூப்பர் கையெழுத்து'** போட்டியில் உங்கள் குழந்தையையும் பங்கு பெறச் செய்யுங்கள். ஒரு வெள்ளைத்தாளில் பத்து வரிகளுக்கு மிகாமல் சுவையான பொன்மொழிகளையோ, அறிஞர்களைப் பற்றிய குறிப்புகளையோ எழுதச் சொல்லி, (தமிழில் மட்டும்) கீழே கொடுக்கப்பட்டுள்ள கூப்பனையும் அவர்களையே பூர்த்தி செய்ய வைத்து, பாஸ்போர்ட் அளவு புகைப்படத்துடன், **'கோகுலம்-சூப்பர் கையெழுத்து, 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடு தாங்கல், சென்னை - 32'** முகவரிக்கு அனுப்புங்கள்.

தேர்ந்தெடுக்கப்படுபவை பிப்ரவரி 2007 கோகுலத்தில் உங்கள் குழந்தைகளின் புகைப்படத்துடன், அவர்கள் கையெழுத்திலேயே அச்சில் வெளியாகும். பரிசும் உண்டு!



**கோகுலம்**

*குழந்தைகளின் நந்தவனம்!*

முடிவுத் தேதி: **10.1.2007**

**உங்கள் குழந்தைகளை ஊக்கப்படுத்துங்கள்! உயரச் செய்யுங்கள்!**

பெயர் : ..........................................

வகுப்பு : ..........................................

பள்ளி : ..........................................

..........................................

வீட்டு முகவரி : ..........................................

..........................................

..........................................

அரிய தகவல்களோடு பாரதியைப் புதிய புதிய நோக்கில் நமக்குக் காட்டி வரும் பாரதி ஆய்வாளர்: பெ.சு.மணி. அவருடைய சம்பந்திய நூல்: 'பாரதியார் பார்வையில் எவர்ஹேரன், விட்மன், நீட்சே'. பெல்ஜியம் நாட்டுக் கவிஞர் எவர்ஹேரனின் கவிதையோடு பாரதியின் கவிதைகள் எவ்விதத்தில் ஒத்திருக்கின்றன என்பது குறித்து எழுதப்பட்டுள்ள அரிய கட்டுரைகள் அடங்கிய நூல். பாரதிக்கு இருந்த உலகப் பார்வைக்கு அதைவிட சிறந்த சான்றைக் கண்டுபிடித்துக் கூற இயலாது.

தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தை அழிப்போம் என்ற பாரதியின் நினைவோடு சாய்ந்தபோது.

செத்துப் பிழைக்கும் மக்களுக்கு
ஜெகத்தை அழிக்கும் சக்தியுண்டு'

என்றும் 'தூக்குமேடை' பாடல் சிலிர்க்க வைத்தது. எழுதியவர், கலைஞர் மு.கருணாநிதி. பாரதியின் பரிமாணம் எப்படி பத்திரிகையாளர், சிறுகதையாசிரியர், முதல் கருத்துப்படக்காரர் என்று விரிகிறதோ, அதேமாதிரி கலைஞர் என்றதும் வசனகர்த்தா, நாவலாசிரியர், பேச்சாளர், கட்சித் தலைவர் எனப் பல பரிமாணங்கள் விரிகின்றன.

ஒவ்வொரு பரிமாணத்தை அடைவதற்கும் கோடிக்கணக்கான விட்டர் வியர்வையைச் சிந்தினால் ஒழிய இது சாத்தியப்படாது. எழுத்து, கலைஞரின் முழு நேரத் தேவையன்று. அரசியலும், கட்சியும் தொண்டர்களுக்கான அறைகூவலுமே அவர் எழுத்தின் நோக்கம். எனினும், அதிலும் எழுத்துத் துறை



**20** யின் சகல சாமர்த்தியங்களும் அவருக்குக் கைகூடியிருப்பது ஆச்சர்யமல்லாத வரம்; வாழ்க்கையும் அனுபவமும் அவருக்குக் கொடுத்திருக்கும் வரம்.

இருபத்து மூன்று வயதாக இருந்த கலைஞர், 'ராஜகுமாரி' படத்துக்குத் திரைக்கதை, வசனம் எழுத, ஏ.எஸ்.ஏ.சாமியால் அழைக்கப்பட்டு எழுதத் தொடங்கி, ஏறக்குறைய அறுபது திரைப்படங்களுக்கு மேலாக திரைக்கதை வசனம் எழுதிவிட்டார் – இடையில் கழக வேலையும், பத்திரிகைப் பணியும் தடைபடாமல்.

பாடல் வரிசையில் 'ஊருக்கு உழைப்பவன்டி' என்னும் பல்லவி தாங்கிய 'மந்திரிகுமாரி' பாடலே திரைப்படத்துக்குக் கலைஞர் எழுதிய முதல் பாடல்:

'ஏச்சுப் பொழைக்கிறவன்
ஏழடுக்கு மாளிகையில்
எகத்தாளம் போடுறானே
அவன் பேச்சை
மறுக்கிறவன்
பிச்சை எடுக்கிறானே'

தான் கொண்டு உழைத்த கொள்கையில் இருந்து பிறழாமல் தொண்டர்களைக் கருத்திற் வைத்து அவர்களின் உணர்வுகளைப் பிரதிபலிக்கும் இப்பாடல் வெளிவந்த ஆண்டு 1950.

வடமொழிக் கிரந்தங்களில் தனித்தேர்ச்சி பெற்றவரும் பாரம்பரிய இலக்கியத் தேர்ச்சியில் பாட்டுகள் இயற்றுபவராகவும் இருந்த திருக்குவளை முத்துவேலருக்கு மகனாக கலைஞர் அறியப்பட்டாலும், அவருடைய பாடல் அப்பா வழி வந்தவை அல்ல; அண்ணா வழி வந்தவை. பதினெட்டு வயதில் தமிழ் மன்ற ஆண்டு விழா நடத்தப் பணமில்லாமல் வந்திருந்த சொற்பொழிவாளர்களை ஊருக்கு அனுப்புவதற்கு, வீட்டிலிருந்த தங்கச் சங்கிலியைத் திருடி விற்று, தமிழ் மீது ஆர்வம் காட்டிய இளைஞரின் நெடிய பயணத்தில் திரைப்பாடலும் அடங்கும்- தனி வனப்போடும், தாம் சார்ந்த கொள்கைகளின் பிரகடனத்தோடும்.

'முத்தெல்லாம் மூக்குச்
சனி
இரத்தக் காயம்
இரத்தினமாம்
வைரங்கள் நட்சத்திரம்
வானவில் வைடூரியம்
குத்துக்கல் சிம்மாசனம்
குப்பைத் தொட்டி ராஜாங்



# மறக்க முடியுமா?

யுகபாரதி

கம்" திராவிட இலக்கியத்தைத் திரைப் பாடலிலும் எழுதிக் காட்டிய இலாகவம் அவருக்குக் கொடுத்த வெற்றி என்பது வடமொழிப் பாடல்கள், ஹிந்திப் பாடல் களின் ஆதிக்கத்தை குறைக்க உதவின. 'குறிஞ்சி மலரொன்று' எனும் மற்றொரு பாடல் (1980)

'அணைத்தால் விளக்கே
இருண்டு விடும்
அன்பின் தேகம் துவண்டுவிடும்
பிணைத்தாள் நம்மைத்
தமிழன்னை - இனி
பிரியேன் என்றும் நானுன்னை' -

சின்னதொரு வாயில் கிடைத்தாலும் அதற்குள்ளும் தமது தமிழுணர்வை, வரலாற்றுத் தெளிவை, வரவேண்டிய மாற்றத்தைப் பற்றிய குறிப்புரையை எழுத அவர் தவறியதில்லை.

கவிஞர் மாயவநாதன் இசையமைப் பாளரிடம் சந்தம் கேட்க, 'உன் பெய ரையே சந்தமாக வைத்துக் கொள்' எனச் சொல்ல, தன்னைக் கேலி செய்வதாகக் கருதிக் கோபித்துக்கொண்டு போனதால், அந்தப் பாடலை எழுதுவதற்குக் கலைஞர் பணிக்கப்படுகிறார். 'மறக்க முடியுமா' பாடல் சரிதம் மட்டுமன்று; பாடலும் மறக்க முடியாத தன்மையை எட்டியுள்ள மைக்கு இசையினும் மொழியே காரண மென்று யாரும் கூறுவர். இது இசையைக் குறைத்து மதிப்பிடுவதாகக் கருதிவிடக் கூடாது. இசையைச் சார்ந்த சொற்களின் கவர்ச்சி சில சமயங்களில் இசையை விஞ்சும் இடமும் உண்டு அல்லவா?

'அழுவதைக் கேட்க
ஆட்களும் இல்லை
ஆறுதல் வழங்க
யாருமே இல்லை
ஏழைகள் வாழ
இடமே இல்லை
ஆலயம் எதிலும்
ஆண்டவன் இல்லை'

- எடுத்தாண்டுள்ள பாடலின் கடைசி இரு வரிகள் நீட்சேயின் 'இறைவன் இறந்துவிட்டான்' என்ற கோட்பாட்



> தப்பாக அகப்பட்டாலும் கையில் தட்டுப்பட்டு விடுகிற வைரக் கற்கள்

டைக் குவித்துக் காட்டுவதாக இன்று தோன்றலாம். உண்மையில், நீட்சேயின் அதிமனிதன் தத்துவம் அல்லது சூப்பர்மேன் தத்துவம் மக்கள் இயக்கத்தை ஏற்பதில்லை. சக்தி வாய்ந்த தனிமனிதனின் செயலுரிமையை ஆதரிக் கும் சமுதாயக் கொள்கையையே முன்




- லீலாஜி

வைக்கிறது. அரசியல் எதிர்ப்புச் சிந்தனை யாளராக கலைஞராலும் ஏற்கப்பட்டுள்ள ஒருவர் தன்னையும் இயக்க சக்தியின் கூறாகக் கருதிச் செயல்பட்டாலன்றி இவ்வரிகளை எழுத முடிந்திருக்காது!

பள்ளிப் பருவந்தொட்டே எழுத்தின் மீதும், இயக்கத்தின் மீதும் ஈடுபாடு ஏற் பட்டுவிட்டதால் படிப்பில் கவனம் செலுத்த முடியவில்லை. படிப்பென்று நான் சொல்வது பள்ளிக்கூடப் புத்தகத் துப் படிப்பு. அதைவிட அதிகமான அறிவு வெளியிலேயே உண்டென்று அறிந்த கலைஞர், தொடர்ந்து 'திராவிட நாடு' இதழுக்குக் கட்டுரை எழுதத் துவங் கினார். உடனே, அறிஞர் அண்ணா 'இனி கட்டுரை அனுப்பாதே; பிரசுரிக்க மாட்டேன். முதலில் நன்றாகப் படி; பிறகு எழுத்தையும், இயக்கத்தையும் பார்த்துக் கொள்ளலாம்' என கடிதம் எழுதியிருக் கிறார். இதை அறிகிறபோது எழுத்தும் இயக்கமுமே அவரது முழு மூச்சாக இருந்ததை உள்வாங்கிக் கொள்ளலாம். இயக்கமே தன் அடையாளம் என்று ஊனர் ஊனராக வாலிபப் பருவத்து ஆசை, அபி லாசைகளைத் துறந்த காரணத்தால்தான் அவரால் பூம்புகார் (1962) படத்தில் இப்படி எழுத முடிந்தது:

வாலிபம் என்பது
கலைகின்ற வேடம்
அதில்
வந்தது வரட்டும்
என்பவன் முழுமூடன்

**த**மிழ்த் திரைப்பட வரலாற்றில் மிக முக்கியமான வருடம் 1952. நடிகர் திலகம் என்ற மாபெரும் நடிப்புத்துறை வல்லு நரை உலகம் கண்ணுற்ற ஆண்டு. படம் 'பராசக்தி'. படம் தயாராகிக் கொண் டிருக்கையில் ஒரு பாடலுக்காக பதி னைந்து நாட்கள் தாமதப்பட்டுக் கொண் டிருந்தது. இசையமைப்பாளர் சுதர்சனம் அமைத்த மெட்டைப் பல கவிஞர்கள் எழுதியும் ஏவி.எம்.செட்டியாருக்குத் திருப்தி வரவில்லை. இறுதியாகப் படத் துக்கு வசனமெழுதிய கலைஞர் அப் பொறுப்பை ஏற்கிறார். பாடல் சிறப்பாக எழுதப்பட்டு இரண்டு மணி நேரத்தில் எல்லாக் குழப்பங்களும் நீங்குகின்றன. 'பத்துக் கவிஞர்கள் செய்ய முடியாததை...' என்று மிகைப்படக் கூறுவதைக் காட்டிலும் இச் சம்பவம் கலைஞரின் ஆற்றலினை உணர்த்தும் என்பது அப்பாடலைக் கேட் கையில் விளங்குகிறது. 'பூமாலை நீயே புழுதி மண் மேலே வீசேன்' என்ற வரி மறுபடியும் பாரதியை நினைவூட்டும் 'நல்லதோர் வீணை செய்து அதை நலங்கெட புழுதியில்' பாடலை விவரிக்க வேண்டியதில்லை.

கலைஞருடைய பாடல் எண்ணிக்கை ஏறக்குறைய ஐம்பது இருக்கும். அவர் சம் பந்தப்பட்ட படங்களுக்கே எழுதியிருக் கிறார். - அண்மையில் வெளிவந்த 'பாசக் கிளிகள்'வரை.

சொர்க்க வசந்தத்தில் ஊமைக்குயில்' என்ற நூலில் நா. காமராசர் சொல்வதைப் போல கலைஞருடைய சிந்தைகள், தப்புக் கடலையைப் போல எப்போதாவது அகப் படுபவை அல்ல. தப்பாக அகப்பட்டா லும் கையில் தட்டுப்பட்டு விடுகிற வைரக் கற்கள். தனது ஒவ்வொரு பரிமாணத் திலும் தனித்து நிற்கும் வீரியம் அவரு டைய உழைப்புக்குண்டு. கலைஞர் எழுத் தால் தெரிந்தவர்; எழுத்தாகத் தெரிபவர்.

(நிறைந்தது)

# அபிஷேக்... ஆஹா ஜஸ்!

படம். இந்தி, தமிழ்
வருகிறது.
நடிக்க, ஐஸ்வர்யாராய்
மல்லிகா ஷெராவத்,
பார்ப்பை எகிற

கனவு காணுங்கள்'
யக் கரு. நாயகன்
வை விரும்பிக்
வாலானது. அதுவே
பாகிறது. சமூகம்
னடுமென்கிற
றான். லட்சியம்
தடைகள்!
சூழும் சுமையும்

ஒருசேர அவனை அழுத்த, எதிர்கொண்டு சமாளித்தானா, நிர்பந்திக்கப்பட்டு வீழ்கிறானா என்பதை சுவாரஸ்யமாகச் சொல்லியிருக்கிறார் மணிரத்னம். இப்படத்துக்காக முதன்முறையாக துருக்கி, இஸ்தான்புல்லில் அபிஷேக் - மல்லிகா பங்குபெற்ற பாடல் காட்சியை எடுத்திருக்கிறார் மணி. வழக்கம்போல் கலர்ஃபுல் ரஹ்மான் - வைரமுத்து கூட்டணி. நீண்ட இடைவேளைக்குப் பிறகு ராஜீவ்மேனன் மணிரத்னத்துடன் ஒளிப்பதிவுக்காகக் கைகோத்திருக்கிறார். மாதவனுக்கு மிக முக்கிய கதாபாத்திரம். 'குரு'வுக்காக அதிகபட்ச ஒத்துழைப்பு தந்து 'ஆஹா' என ஐஸ்வர்யா டைம அசர வைக்க, தமிழில் நடிக்கும் உற்சாகத்தில் தம் பங்குக்கு அசத்தியிருக்கிறாராம் அபிஷேக். மிகுந்த எதிர்பார்ப்பைக் கிளறிவிட்டிருக்கும் 'குரு', ஜனவரியில் திரைக்கு வருகிறான்.

- **தெனாலி**



ஒரே வகுப்பறையில் ஒன்றாம் வகுப்பு முதல் ஐந்தாம் வகுப்பு வரை தடையின்றிக் கல்வியும், எனக்கும் அவனுக்குமுடனான நட்பும் தொடர்ந்தன.

நாட்கள் செல்லச் செல்ல நாங்கள் சந்திக்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டது. நான் பள்ளி இறுதி வகுப்பு தேறி மதுரை அமெரிக்கன் கல்லூரியில் இன்டர்மீடியட் படித்துக்கொண்டிருந்தேன். சில மாதங்களுக்குப் பின் என் நண்பன் திடீரென்று ஒருநாள் காலை என் வீட்டுக்கு வந்தான். அவன் பள்ளி இறுதித் தேர்வில் தோல்வியடைந்ததையும், அவனுடன் படித்த மாணவியைக் காதலிப்பதையும் கூறி, அவர்கள் திருமணத்துக்கு அவன் தந்தையிடம் நான் அனுமதி கேட்டுப் பேச வேண்டும் என்றான்.



அவனுடைய தந்தை மேலூரில் பெரிய மிராசுதார். என்னிடமும் அவர் மிகுந்த அன்பு வைத்திருந்தார்.

நண்பனிடம், "உன் தந்தை உன் விருப்பத்துக்கு உடன்பட மாட்டார். நீ இந்தத் திருமணத்தைத் தவிர்த்தால் நல்லது" என்றேன். அவன் ஒன்றும் சொல்லாது சென்றுவிட்டான்.

நான்கு மாதங்களுக்குப் பின் எனது முகவரிக்கு நண்பனிடமிருந்து கடிதம் வந்தது. அவன் காதலியைத் திருமணம் செய்துகொண்டதாகவும், இப்போது கும்பகோணத்தில் இருப்பதாகவும் ஓர் அச்சக முகவரியைக் கொடுத்து, அந்த முகவரிக்கு ரூ. 300 பணம் அனுப்பி வைக்கவும் என்றும் எழுதியிருந்தான். அவனுடைய நிலைமையை எண்ணி வேதனைப்பட்டேன்.

மனத்தில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு மேலூருக்குப் போனேன். நண்பனின் தந்தையிடம் சொன்னேன். சினத்தால் அவர் முகம் சிவந்தது. 'இதெல்லாம் உன் ஏற்பாடுதானே' என்று துவங்கி என்னைத் திட்ட ஆரம்பித்து விட்டார், அவர். அமைதியாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்ட நான், கடிதத்தை அவரிடம் கொடுக்காது முகவரியை மட்

## வாழ்வின் மறக்க முடியாத நாட்களைப் பற்றிப் பிரபலங்கள் பேசும் பகுதி

டுமே சொன்னேன். இதற்குள்ளாகவே காதலியின் தந்தையும் அங்கு வந்து விட்டார். இறுதியில் இரண்டு குடும்பத்தினரும், நானும் புறப்பட்டோம்.

அதிகாலை 6.30 மணிக்கு கும்பகோணத்தை அடைந்தோம். நண்பனின் முகவரியைத் தேடிச் செல்லும் வழியில் அவர்கள் என்னைத் திட்டிக்கொண்டே நடக்கத் தொடங்கினார்கள். மனது 'பக், பக்' என்று துடிப்பது என் காதுக்குக் கேட்டது.

சற்றுத் தொலைவில் ஒரு பழைய கட்டடம். கட்டடத்தின் மேற்பகுதியில் ஓலையால் கட்டப்பட்ட ஒரு கூரைவீடு என் கண்களில் பட்டது. உடனே என்னை அறியாது ஓர் ஈர்ப்பு என்னை அங்கே 'போ,போ' என்று சொன்னது. அங்கு போனதும் கட்டட ஜன்னலில் ஒரு சின்ன பெயர்ப் பலகை... காபி கடை என்று. அந்த இடத்தை என்னால் கடந்து செல்ல முடியவில்லை. நண்பனின் தந்தையிடம், "எனக்குப் பசிக்கிறது, இந்தக் கடையில் பலகாரம் சாப்பிடலாமா?" என்றேன். எல்லோரும் என்னை ஆச்சரியமாகப் பார்த்து "இரயில் நிலையம் அருகே எத்தனையோ

பெரிய கடைகள் இருக்க, அங்கு சாப்பிடாமல் அவனைப் பார்த்த பின்தான் பல் துலக்குவேன் என்றான்... என்ன வந்தது இவனுக்கு!" என்று என்னை மீண்டும் திட்டினாலும் நான் முன்னே நடக்க, அவர்களும் கடைக்குள் வந்துவிட்டார்கள். பையைக் கடையினுள் வைத்துவிட்டு அனைவரும் பின்பக்கம் போய், உமிக்கரியை எடுத்துப் பல் துலக்கிக் கொண்டிருந்தோம்.

அப்போது ஓலைக் கூரையின் வெளிப் பக்கத்தில் இருந்து 'உஸ், ஏய் உஸ்' என்ற சத்தம் வர, எதேச்சையாக மேலே பார்த்தேன். அங்கே என் நண்பன்!

# விடை தெரியாத ரகசியம்!



கை ஜாடையால் என்னைக் கூப்பிட்டான்.

"நான் எல்லோருக்கும் 'டிமிக்கி' கொடுத்து விட்டுப் பின்பக்கமாக மாடிக்குப் போனேன். நண்பன், "டேய், உனக்கு நாங்கள் இங்கே இருப்பது எப்படித் தெரியும்?" எனக் கேட்டான். நான் அவனிடம், "அசக முகவரி தந்த நீ, இங்கே இருக்கின்றாயே?" என்றேன். அவனோ, "சூழ்நிலை சரியில்லை. கடந்த நான்கு மாதங்களாக இங்கேதான் தங்கியிருக்கின்றோம்" என்றான்.

நண்பனையும் அவன் மனைவியையும் கீழே அழைத்துக்கொண்டு வந்தேன். அவர்களைப் பார்த்ததும் நண்பனின் தந்தை, "இவனுக்கு எல்லாம் தெரிந்தும், தெரியாதது போல் நடித்திருக்கிறான்" என என்னைத் திட்ட ஆரம்பித்துவிட்டார். இரண்டு குடும்பங்களும் சிறிது நேரம் பேசி சமரஸமாயின.

மதுரைக்குப் பயணப்பட்டோம் - அனைவரும். தொடர்வண்டிப் பயணத்தில் அனைவரும் நிம்மதியாகத் துயில் கொள்ள, எனக்கு நானே கேட்டுக் கொண்ட கேள்வி: நண்பன் இருந்த இடத்துக்கு எனக்குத் துல்லியமாக வழிகாட்டியது யார்?

நண்பனின் குழந்தைகளெல்லாம் இன்று இளைஞர்கள். என் நண்பன் வாசுதேவன் இயற்கை எய்திவிட்டான். ஆண்டுகள் பல கடந்தும்கூட இன்றும் நினைத்துப் பார்க்கின்றேன் - விடை தெரியா அந்த இரகசியத்தை!

சந்திப்பு:
**த.இ.தாகூர்**



**சாலமன் பாப்பையா**

# நடக்குமென்பார்;

**மேஷம்:** அனுகூலமான வாரம். எண்ணங்கள் யாவும் ஈடேறும். கல்வி வளம் மேலோங்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். திருமணக் காரியம் கைகூடும். பூர்வீகச் சொத்து, பாகப்பிரிவினை ஆகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் காண்பிக்கும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். குரு / ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**ரிஷபம்:** சுபகாரியம் கைகூடும் வாரம். தனம், கல்வி, வாக்கு வன்மை மேலோங்கும். வீடு / மனை வாங்க நல்ல காலம். தடை விலகித் திருமணம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். ராகு / கேது / வழிபாடு நற்பலனைத் தரும்.

**தஞ்சை பரத்வாஜ்**

**மிதுனம்:** மேன்மையான வாரம். பணக்கஷ்டம் விலகும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல லாபம் காணும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். நீண்டதூர பிரயாண வாய்ப்பு வந்து சேரும். திருமணக் காரியம் கைகூடும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கடகம்:** சொத்துகள் வாங்க நல்ல நேரம். பணக்கஷ்டம் இருக்காது. படிப்பில் கவனம் செலுத்தவும். கணவன் - மனைவிக்குள் அனுசரணை தேவை, வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் காண்பிக்கும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**சிம்மம்:** மன நிறைவான வாரம். சுப நிகழ்ச்சிகள் கைகூடும். நண்பர் / உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். வீடு / தொழில் மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் கணிசமான லாபம் கிட்டும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**கன்னி:** மன மகிழ்ச்சியான வாரம். பணக்கஷ்டம் இருக்காது. கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். வீடு / தொழில் மாற்றம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும்.

# நடக்கும்!




செலவுகள் சுபமானதாக இருக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**துலாம்:** வெற்றிகரமான காரியங்களைச் செய்து முடிப்பீர்கள். பொருளாதார மேன்மை உண்டாகும். பூர்வீக சொத்து பாகப்பிரிவினை ஆகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். தொழிலில் அபிவிருத்தி ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**விருச்சிகம்** : நல்ல முன்னேற்றமான வாரம். தனம், கல்வி, வாக்கு மேலோங்கும். சுப செலவு ஏற்படும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். உத்தியோகத்தில் மாற்றம் ரெடி. வீடு / மனை வாங்க நல்ல தருணம். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். குரு / ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**தனுசு:** பண வரவு உண்டு. வெளிதேசம் செல்ல நேரும். உத்தியோகத்தில் இடம் மாற்றம் ரெடி. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். மனச் சலனம் விலகும். திருமணக் காரியம் கைகூடும். சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**மகரம்:** சுமாரான வாரம். வாகனத்தில் போகும் போது கவனம் தேவை. படிப்பில் கவனம் தேவை. திருமணக் காரியம் கைகூடும். வேலைப் பளு அதிகரிக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். சுப செலவு ஏற்படும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் வளர்ச்சி ஏற்படும். சனி / ராகு / கேது / வழிபாடு நற்பலனைத் தரும்.

**கும்பம்:** சுமாரான வாரம். நீண்ட தூர பிரயாண வாய்ப்பு வந்து சேரும். தொழில் துறையில் மாற்றம் நேரிடும். சுபகாரிய நிகழ்ச்சிகள் கைகூடும். வராத பணம் வந்து சேரும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். கல்வி வளம் மேலோங்கும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர, நற்பலன் கிட்டும்.

**மீனம்:** அற்புதமான வாரம். எண்ணங்கள் யாவும் ஈடேறும். திருமணக் காரியம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். தூர தேச அழைப்பு கிட்டும். பொருளாதார மேன்மை உண்டாகும். வெளிநாட்டு வியாபாரம் நல்ல பலனைத் தரும். ஆஞ்சநேயர் காயத்ரி படித்து வர, நற்பலன் உண்டாகும்.

## பரத்வாஜ் பதில்கள் அடுத்த வாரம்...

**24.12.2006 முதல் 30.12.2006 வரை**



''பிக்பாக்கெட்காரங்க சங்கத்திலே இருந்து நமக்குக் கடுதாசி வந்திருக்கு சார்!''

''என்னன்னு?''

''இப்ப நம்ம கம்பெனி தயாரிக்கிற பிளேடு முன்னே மாதிரி ஷார்ப்பா இல்லையாம்!''

- ஆர்.ஆர்.பூபதி

''சுண்டல் தீர்ற வரைக்கும் என் காதலர் பேச மாட்டார்!''

''அப்புறம்?''

''இன்னொரு பொட்டலம் சுண்டல் வாங்கித் தரச் சொல்வார்!''



# ஷார்ப்பா இல்ல!



''திருமணத்துக்குப் பிறகு உங்க கணவர் உங்களை நடிக்க அனுமதிக்கலைன்னா என்ன செய்வீங்க?''

''வேற வழி... அவரோட அனுமதியில்லாமல் நடிக்க வேண்டியது தான்!''

- லீலாஜி

# திருஷ்டிப் பரிகாரம்!



நம்முடைய வழக்க பழக்கங்களை மேனாட்டாரும் சரி, மேனாட்டு நாகரிகத்தில் மூழ்கியவர்களும் சரி, அறிய முடியாததற்கு ஒரு முக்கியமான காரணம் இருக்கிறது. அது ஐம்புலன்களை அடக்கி ஆளும் தத்துவத்தை அறியாததுதான். ஐம்புலன்களிலும் கண் ரொம்பப் பொல்லாதது. மனிதனுடைய வீழ்ச்சிக்குக் காரணமாயிருப்பது கண்தான். மனிதன் கண்ணால் ஒரு பொருளைப் பார்க்கிறான். அது அழகாயிருந்தால் - சுத்தமாயிருந்தால் - அவனுக்கு அந்தப் பொருள் மேல் ஆசை பிறக்கிறது. ஆசையிலிருந்து பொறாமை, துவேஷம் - மற்ற எல்லாத் தீமைகளும் தொடர்ந்து ஏற்படுகின்றன.

எனினும், அதற்காக நாம் என்ன செய்கிறோம்? முட்டாள்தனமாகக் கண்களைக் குத்திக்கொண்டு விடுகிறோமா? கிடையவே கிடையாது. அழகான பொருள்களை அவலக்ஷணமாக்குகிறோம். சுத்தமாயிருப்பவற்றைக் கொஞ்சம் அசுத்தப்படுத்தி வைக்கிறோம். கண் அவற்றைப் பார்த்து மகிழ்ச்சியடைவதில்லை; எனவே மனம் ஆசைகொள்வதில்லை; மற்ற தீமைகளும் தொடர்வதில்லை.

''கண் திருஷ்டி'' என்று சொல்கிறோமே, அதனுடைய உட்கருத்தும் இதுவேதான். ஒருவர் ஒரு புதிய வீடு கட்டுகிறார்; ரொம்ப அழகான வீடு; அதன் மேல் திருஷ்டி விழுந்துவிடப் போகிறதென்று வாசலில் ஒரு மகா கோர அவலக்ஷணப் பொம்மையை நாட்டி வைக்கிறார். இது அவருடைய வீட்டைக் காப்பதற்காக அல்ல. கேவலம்... கண் திருஷ்டியினால் கல்லையும் சுண்ணாம்பையும் இடித்துத் தள்ளிவிட முடியுமா? பின் என்னவென்றால், வீதியோடு போகிறவர்கள் வீட்டை உற்றுப் பார்ப்பார்கள். "இந்த வீடு இவ்வளவு அழகாக அமைந்திருக்கிறதே; நமக்கு இந்த மாதிரி இல்லையே!" என்று நினைத்துப் பொறாமைப்படுவார்கள். இப்படி அவர்கள் மனம் கெட்டுப் போகாமல் இருப்பதற்குத்தான் திருஷ்டிப் பரிகாரம் வைப்பது. அவலக்ஷணப் பொம்மை முன்னால் இருந்தால், அதைப் பார்த்து அருவருப்புக் கொண்டு வீட்டைப் பாராமல் போய்விடுவார்கள் அல்லவா?



- 'அதிர்ஷ்ட கவசம்'
வானதி வெளியீடு

# இசை

சினிமாவில் இசையமைப்பாளர் ராமநாத ஐயர் காலத்தில் பாடல்கள் ஜனரஞ்சகமாக்கப்பட்டன. எம்.எஸ்.வி.யும் கண்ணதாசனும் தமிழ்த் திரையுலகுக்குள் நுழைந்த பிறகு, பாமர மக்களிடமும் பாடல்களைக் கொண்டு சேர்க்கும் பணி தீவிரமாக நடைபெற்றது. எழுபதுகளில் இளையராஜா வந்தபிறகு ஆர்க்கெஸ்ட்ரேஷனுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. தொண்ணூற்றிரண்டுக்குப் பிறகு எலெக்ட்ரானிக் புரட்சியை இசையில் கொண்டு வந்தார் ஏ.ஆர்.ரஹ்மான். அதுதான் இன்றைய இசைக்கு ஓர் அடித்தளமாக இருந்து வருகிறது.









இசையுலகில் தடம் பதிக்க முதலில் இசையின் அடிப்படையான கர்நாடக சங்கீதமும் ஹிந்துஸ்தானியையும் கற்றுக் கொள்ளவேண்டும். அடுத்து கீபோர்டு அல்லது பியானோவை இயக்கக் கற்றுக் கொள்ளவேண்டும். கீபோர்டைக் கரைத்துக் குடிக்காமல் இசை யமைப்பது என்பது இன்றைக்கு அவ்வளவாகச் சாத்தியப்படாது. ஓரளவு இசை பின்னணி உள்ளவர்களுக்கு கீபோர்டைப் படிக்கக் குறைந்தது ஒரு வருடமாவது ஆகும். இசையோடு எலெக்ட்ரானிக்ஸ் அறிவு தெரிந்திருப்பதும் அவசியம். சில சமயங்களில் வாத்தியக்காரர்கள் செய்யும் வேலைகளை கீபோர்டு செய்து முடித்து விடுகிறது (ஆனாலும் ஸ்பெஷலிஸ்டுகளை கீபோர்டால் அசைக்க முடியாது).

வீட்டில் ஒரு ஹோம் ஸ்டூடியோ அமைத்துக்கொண்டாலே இசையமைக்கலாம். இன்று இசை பல்வேறு வடிவங்களாக உருவெடுத்த பிறகு, இங்கு ஏராளமான கதவுகள் திறக்கப்பட்டுள்ளன. சினிமா, டீ.வி. சீரியல்கள், விளம்பரங்கள், செல்போன் ரிங்டோன், டாய்ஸ் மியூசிக் என்று இசையமைப்பாளருக்கு எக்கச்

இசையமைப்பாளர் கணேஷ்குமார்



# ஐந்தாயிரம் முதல் ஐந்து லட்சம் வரை...

தது மூன்றரை லட்சம் ஆகும். தவிர, இசைக் கருவிகள் செலவுகள் தனி. குறும்படங்கள், பாப் ஆல்பங்கள் செய்து நமக்கென்று ஒரு தனி விசிட்டிங் கார்ட் அடித்துக் கொள்ளலாம். சினிமாவில் ஓர் இசையமைப்பாளருக்கு ஆரம்பத்தில் மூன்று லட்ச ரூபாய் வரும். படிப்படியாக, கோடி ரூபாய் வரை சம்பளம் கிடைக்கும். விளம்பரங்களில் ஐந்தாயிரம் முதல் ஐந்து லட்சம் வரை இசையமைப்பாளருக்குச் சம்பளம் தரப்படுகிறது. மக்களுக்குப் பிடித்துவிட்டால், வருமானம் இன்னும் உயரும்.

சக்க வாய்ப்புகள் காத்துக் கிடக்கின்றன. இவற்றைத் தவிர, வெளிநாட்டுப் படங்களுக்கும் இசையமைக்கலாம். சாஃப்ட் வேரைப் போல இசைக்கும் ப்ராஜெக்ட்டுகள் வெளிநாட்டிலிருந்து வர ஆரம்பித்துள்ளன.

இன்று டி.எஃப்.டி.யில் ஆடியோ இன்ஜினியரிங் என்கிற படிப்பு உள்ளது. ட்ரினிட்டி காலேஜ் ஆஃப் லண்டனிலும் இசை பயிற்றுவிக்கப்படுகிறது. இங்கு எட்டு கிரேடுகள் உள்ளன. பாரம்பரிய இசை அடையாறிலுள்ள அரசு இசைக் கல்லூரியில் கற்றுத் தரப்படுகிறது. இவற்றைத் தவிர, ஆடியோ மீடியா, ஹார்மோனியா போன்ற இசைப் பயிலகங்கள் மாணவர்களுக்கு அடிப்படையிலிருந்து இசையைக் கற்றுத் தருகின்றன.

ஹோம் ஸ்டுடியோ அமைக்கக் குறைந்

இசை, எலெக்ட்ரானிக்ஸ் அறிவோடு எண்ணங்களை வெளிப்படுத்தும் திறனும் ஓர் இசையமைப்பாளருக்கு அவசியம் இருக்க வேண்டிய தகுதி. கட்டாயம் உலக இசையைக் கற்றுக் கொள்ள வேண்டும். குண்டுச்சட்டிக்குள் குதிரை ஓட்டுவது இன்றைய காலகட்டத்துக்குப் பொருந்தவே பொருந்தாது. பறவையைப் போல நம் கற்பனை எங்கு வேண்டுமானாலும் சிறகடிக்கத் தயாராக இருக்க வேண்டும். ஒவ்வொருபடியாக பொறுமையாக ஏறுபவருக்கு உச்சத்தில் நல்ல இடம் காத்துக்கொண்டிருக்கிறது.

சந்திப்பு: **ச.ந.கண்ணன்**





# "என் வெங்காயமே! என் வெள்ளைப்பூண்டே!"

மஹாகவி பாரதிகூட 'காயிலே புளிப்பதென்ன? கனியிலே இனிப்பதென்ன?' என்று கண்ணபெருமானைக் கேட்பதோடு நிறுத்திக் கொண்டுவிட்டார். ஆனால் மஹாராஷ்டிர சந்த் பரம்பரையைச் சார்ந்த ஸாவதாமாளி என்பவரோ பகவானை 'என்னுடையே வெங்காயமே! வெள்ளைப் பூண்டே' என்று அழைத்துப் பாடும் விந்தையிலும் விந்தையை நிகழ்த்தியிருக்கிறார். அவர் இயற்றியுள்ள



மராட்டி அபங்கத்தின் பொருள்:

என்னுடைய விடாபாயீ (விட்டலன்) எனக்கு வெங்காயம், முள்ளங்கி, காய்கறி ஆகியவற்றைப் போல. என்னுடைய ஹரி எனக்கு வெள்ளைப் பூண்டு, பச்சை மிளகாய், கொத்துமல்லி ஆகியவற்றைப் போல.

பக்தித் திளைப்பில் இவ்வாறு பாடும் ஸாவதாமாளி ஒரு தோட்டக்காரர்.

ஸாவதாமாளியைப் போன்ற எளிய மக்கள் கண்டறியாதனவற்றைக் கண்டு பாடிய மராட்டி கீதங்களே அபங்கங்கள் என்று அறியப்படுகின்றன. இதைப் போன்ற பல அபங்க கீதங்களின் மொழி பெயர்ப்பு நூல் சந்த்வாணீ - சமீபத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

அபங்கம் என்றாலே களங்கமில்லாதது; தூய்மையானது என்று பொருள். மஹாராஷ்டிர மாநிலத்தில் பக்தி இயக்கம் மலர்ந்தபோது, ஞானேசுவரர், நாமதேவ், ஏகநாத், துகாராம் போன்ற அவதார புருஷர்கள் சராசரி குடும்பச் சூழல்களில் தோன்றி, பண்டரிபுரத்து பாண்டுரங்க விட்டலன் மீது கரைகாணாத பக்தி கொண்டு, அபங்க கீதங்களைப் பொழிந்தார்கள். இவர்களது சிந்தனையின் ஸ்படிகத்தைப் போன்ற தூய்மையும் வாழ்க்கை முறையின் பரம எளிமையும் இந்த அபங்க கீதங்களின் பொருளழகிலும் வடிவழகிலும் வியாபித்திருக்கக் காணலாம்.

மஹாராஷ்டிர பக்தி இயக்கம் இலட்சோப லட்சம் மக்களை அபங்க கீதங்களால் ஈர்த்தது; ஒன்று சேர்ந்து இறைவனின் நாமாக்களைப் பாட வைத்தது. பெருங் கூட்டமாகத் திரண்டு இறையுணர்வை அனுபவிக்கச் செய்ததால், பக்தி என்பது தனிமனித அனுபவமாக மட்டுமே நின்றுவிடாமல், சமூகமே சேர்ந்து அனுபவிக்கும் சொத்தாகவும் ஆயிற்று. பக்தி மார்க்கம் வாழ்க்கை முறையாகவே மாறி சமூக உயர்வுக்கும் சமன்பாட்டுக்கும் கருவியாகியது.

இந்தப் பெரும் புரட்சியில் பங்கு வகித்த மராட்டிய கீதங்களுக்குச் சமய ரீதியாக மட்டுமின்றி வரலாற்று ரீதியாகவும் இலக்கிய ரீதியாகவும் மிகுந்த முக்கியத்துவம் உண்டு. இப்படிப்பட்ட

அபங்க கீதங்களின் மொழிபெயர்ப்பு நூலாக வெளியாகியுள்ளது ஸந்த்வாணி. இன்று உலகெங்கும் அபங்கங்களைப் பாடிப் பொருள்கூறி வரும் கடைய நல்லூர் ஸ்ரீ துகாராம் கணபதி மஹராஜின் முயற்சியிலும் மேற்பார்வையிலும் தொகுக்கப்பட்டு, கலாக்ஷேத்திரா பதிப்பகத்தாரால் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது ஸந்த்வாணி - முதல் பாகம். இந்த முதல் பாகத்திலேயே 522 அபங்கங்கள்!

ஸந்த்வாணியின் தனிச் சிறப்பு என்னவென்று கேட்டால், 522 பாடல்களும் மராட்டி மொழி உச்சரிப்பில் ஹிந்தி, தமிழ் ஆகிய இரு லிபிகளில் வெளியிடப் பட்டுள்ளன. இந்த இரு மொழி களிலும் அவற்றின் பூரண அர்த்தமும் தரப்பட்டிருக்கிறது. ஹிந்தி வடிவமும் தமிழ் வடி வமும் எதிரெதிர்ப் பக்கங்களில் இடம்பெறுகின்றன.

மராட்டி மொழிக்கே உரிய தனியான ருசியும் குணமும் மாறாமல் தமிழில் பொருள் கூறப்பட்டிருக்கிறது-இந்த நூலில்.




மொழிபெயர்ப்புக்கும் பிழை திருத்தும் பணிக்கும் பொறுப்பேற்றுள்ள என். கோபால், முறைப்படி மராட்டி பயின்றவர் அல்லர்! பரிச்சய அறிவையும் துகாராம் கணபதி மஹராஜின் ஆசி யையும் கொண்டு இப்பணியைச் செய்திருப்பதாக அவர் தமது முன்னுரை யில் தெரிவிக்கிறார்!

தொகுப்பு, வெளியீடு:
கோஸம்ரக்ஷணா டிரஸ்ட்,
விட்டல் விஹார்,
கிழக்கு வீதி,
கடையநல்லூர் - 627 751.
தொலைபேசி:
04633 241282
174, மேலை சித்திரை வீதி,
ஸ்ரீரங்கம்,
திருச்சி - 620 006.
தொலைபேசி :
0431 2434027
(விலை : குறிப்பிடப்படவில்லை)

- சீதா ரவி

# அக்கம் பக்கம்



## ஷாருக்கானுக்கு யார் குரல்?

**க**ம்யூனிஸ்ட்கள் ஆளும் மே.வங்கத்தில், கை ரிக்ஷா சமீபத்தில்தான் ஒழிக்கப்பட்டது. கொல்கத்தா நகரில், கைரிக்ஷா இழுத்து, சம்பாதித்துக் கொண்டிருந்த சுமார் ஆறாயிரம் தொழிலாளிகளின் எதிர்காலம் இப்போது கேள்விக்குறியாகி இருக்கிறது. முடிந்த அளவுக்கு, நகரில் உள்ள வாகனங்கள் நிறுத்தும் இடங்களில் கட்டணம் வசூலிக்கும் பணிக்கு அவர்கள் நியமிக்கப்படுவார்கள். மற்றவர்களுக்கு நஷ்டஈடு வழங்கப்படும் என்று சொல்லியிருக்கிறார் மேற்கு வங்க முதல்வர்.

“**அ**மிதாப்ஜிக்கு நான் மாற்று இல்லை; அவர் பங்கேற்க முடியாத சூழ்நிலையில், பொன்னை வைத்த இடத்தில் பூவை வைப்பதைப்போல, என்னை உட்கார வைத்திருக்கிறார்கள்” என்று சொல்லி இருக்கிறார் ஷாருக்கான். ஸ்டார் டீ.வி.யில் குரோர்பதி நிகழ்ச்சியை ஜனவரி முதல் நடத்தப் போகிறவர் இவர்தான்! “கம்ப்யூட்டர்ஜி!” என்று கம்பீரமான அமிதாபின் குரலுக்கு அச்சு அசலாக தமிழ் வடிவம் கொடுத்தார் நிழல்கள் ரவி. ஷாருக்கானுக்கும் அவரே குரல் கொடுப்பாரா? இல்லை, வேறு நபர் தேடுகிறார்களா?

**ப**குஜன் சமாஜ் கட்சி ஸ்தாபகரான கன்ஷிராமின் இறுதிச் சடங்குகள் புத்த சமய முறையில் நடைபெற்றது பழைய செய்தி. அதனையடுத்து, மாயாவதி, பௌத்த பிட்சுகள் சூழ ஒரு நிகழ்ச்சியில் கலந்துகொண்டார். நிகழ்ச்சியின் கிளைமாக்ஸ், பிட்சுக்கள் மாயாவதிக்கு ஆசி வழங்கியதுதான். என்ன சொல்லி வாழ்த்தினார்கள் தெரியுமா? “நீங்கள் இந்தியப் பிரதமராக வர வேண்டும்” என்றுதான்!

‘**த**கவல் கோரும் உரிமைச் சட்டம்’ குறித்து அண்மையில் பாராளுமன்றத்தில் நடந்த வேதனையான நகைச்சுவை இது. ராஜ்யசபையில் ஓர் எம்.பி., “இதுவரை தகவல் கோரி பொதுமக்கள் விண்ணப்பித்து, அதற்கு முறையாகத் தகவல் தராத காரணத்துக்காக அரசு அதிகாரிகள் எத்தனை பேர் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது?” என்று கேள்வி கேட்க, அதற்கு அரசு அளித்த பதில்: “சரியான தகவல் அரசின் கைவசமில்லை.”

தொகுப்பு: **சி.எம்.**

இன்றைய உலகில் எல்லாவற்றையும் சுலபமாக்க நாம் தொடர்ந்து முயன்று வருகிறோம். ஆனால், ஆன்மிகத்தில் மட்டும் ஏன் இன்னும் அதே பழங்கால முறைகளையே பின்பற்றிக் கொண்டிருக்கிறோம்? கடவுள், ஆத்மஞானம் தன்னை அறிதல் என்பவை ஏன் கடினமானவையாகத் தோன்றுகின்றன? அவற்றையும் சுலபமாக்க வேண்டாமா? அதற்கு முதலில் லௌகீக வாழ்வு நிலையைப் பார்ப்போம்.

முன்பெல்லாம் அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்றால், மக்கள் பயத்தில் நடுங்குவார்கள். பரிசோதனைக்காக இரத்தம் எடுத்தால்கூட பயப்படுவார்கள். ஆனால் இப்போதோ, இருதய அறுவை சிகிச்சை செய்தால் இரண்டாம் நாளே மருத்துவர்கள் நம்மை நடக்க வைத்துவிடுகிறார்கள். முன்பு, வயிற்றில் அறுவை சிகிச்சை என்றால் ஆறு, ஏழு அங்குல நீளத்துக்குத் தையல் போடப்பட்டு, வடுவாகிவிடும். இன்று, ஒரு குண்டூசி முனை அளவில் ஓட்டை போடப்பட்டு சிகிச்சை செய்வதால் அந்த மனிதருக்குப் பெரும் அறுவை சிகிச்சை நடந்த அடையாளத்தைக்கூடக் கண்டுபிடிக்க முடியாது. இதேபோல, கண் சிகிச்சைக்கு இருபது நாட்கள் அல்லது ஒரு மாதத்துக்கு கண்ணில் கட்டுப்போட்டு வைப்பதும் மாறிவிட்டது. சிகிச்சை முடிந்து ஓரிரு மணி நேரத்திலேயே நோயாளியை வீட்டுக்கு அனுப்பி விடுகிறார்கள். எல்லாமே வெகு எளிமையாக ஆகிவிட்டன. காலம் செல்லச் செல்ல எதிலுமே நேரத்தைச் சிக்கனப்படுத்தி வருகிறோம்.





சரியான குரு கிடைக்கப் பெற்றவன், உண்மையை அறிந்துகொள்வான். அந்தக் குருவுக்கு உண்மை தெரிந்திருக்க வேண்டும். குருவுக்குத் தெரிந்திருந்தால்தான் மாணவருக்கும் தெரிய வரும். அது நம்மைப் பற்றி என்பதால், தெரிந்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

ஆத்மஞானம், எளிமையானவற்றுள் மிக எளிமையானது. பின், நாம் எதற்காகக் காத்திருக்கிறோம்? யாரோ ஒரு பெரிய மனிதர் அல்லது ஆன்மிகவாதி இருபது ஆண்டுகளுக்குத் தியானம் செய்தார் என்று தெரிந்தால், நாம் அதை உதாரணமாக எடுத்துக் கொண்டு விடுகிறோம். அதே உபநிடதம், 'நிமிஷத வித்யத்தத' - அதாவது, 'கண்ணிமைக்கும் நேரத்தில், மின்னல் போல' - என்கிறது.

**ஆத்மஞானம், எளிமையானவற்றுள் மிக எளிமையானது. பின், நாம் எதற்காகக் காத்திருக்கிறோம்?**

என்றாலும் தன்னை அறிதல், சுய விழிப்புணர்வு, ஈஸ்வரன், விடுதலை, சுதந்திரம் போன்றவற்றில் மட்டும் ஏன் எல்லோரும் கற்கால முறைகளையே பின்பற்றிக் கொண்டிருக்கிறோம்? புத்தருக்கு ஞானம் பிறக்க ஒரு வருடம் ஆயிற்று. மற்றொருவருக்குப் பத்து வருடங்கள், இன்னொருவருக்கு முன்னூறு வருடங்கள்... அதற்காக நாமும் பத்து வருடங்கள் எடுத்துக் கொள்ள வேண்டுமா, என்ன? அது நல்லதன்று. அந்த மனிதருக்குப் பத்து வருடங்கள் ஆயிற்றென்றால், அவருக்கு நல்ல குரு கிடைக்காதிருந்திருக்கலாம்.

'ஆச்சார்யவான் புருஷ வேதா' என்கின்றன வேதங்கள். அதாவது,

'யோக வசிஷ்ட' என்ற உரையாடலில் 'இந்தப் புரிதலைப் பெற எவ்வாறு காலமாகும்?' என்று கேட்கிறார், ராமர். வசிஷ்டர் அவரை ஒரு தாமரைப் பூவையும் ஊசியையும் கொண்டு வரச் சொல்லி, ஊசியால் அந்தப் பூவைக் குத்தச் சொல்கிறார். பிறகு, 108 இதழ்கள்




''கபாலியோட வீட்டுச் சாவி எதுக்கு ஸ்டேஷன்ல தொங்குது?''

''வீட்ல சம்சாரம் இல்லியாம்... திருடிட்டுத் திரும்பறப்ப வந்து வாங்கிக்கறேனுருக்கான்!''

- அம்பை தேவா

கொண்ட அம்மலரைத் திறந்து பார்க்கையில், ஒவ்வோர் இதழிலும் ஊசி குத்திய துளை தெரிகிறது. 'ஒவ்வோர் இதழிலும் அந்தத் துளையை ஏற்படுத்த எவ்வளவு நேரமாயிற்றோ, அதே அளவு நேரம்தான் உண்மையைப் புரிந்து கொள்ளவும் தேவை' என்கிறார் வசிஷ்டர். உண்மையே நாம்தான் என்பதால், அதை உணர்தலும் வெகு துரிதமானது.

ஆக, கடவுளை உணர்தல் மட்டும் கடினமானதாக ஏன் ஆக வேண்டும்? தப்பித் தவறி எவராவது, இது சிரமம்'' என்று சுலபமாகக் கூறிவிடுவோம். எவரெஸ்ட் சிகரத்தை அடைவது ரொம்பக் கடினம் என்று தீர்மானத்துக்கு வந்துவிட்டால், பிரச்னையே இல்லை... எந்த முயற்சியையும் எடுக்க வேண்டாம். இதே பாணியில்தான் எந்தக் கடினமான விஷயத்தையும் கடவுளுடனும், அவர் சம்பந்தமான நடவடிக்கைகளுடன் தொடர்புபடுத்தி விடுகிறோம்.

மனிதர்கள் எதை வேண்டுமானாலும் சுலபமானது என்றோ, கடினமானது என்றோ சொல்லலாம். ஆனால் உண்மையைத் தெரிந்துகொள்வது வெகு கடினமானது என்று வேதங்கள் சொல்



''கபாலி, மாமூல் தர்றத நேரம் காலத்துல தரக்கூடாதா? ரொம்ப காக்க வைக்கறியே?''

''வேணும்னா புகார் புக்ல எழுதி வைங்க... பரிசீலிக்கறேன்!''

- அம்பை தேவா

சுலபமானது என்று சொல்லிவிட்டால் போயிற்று- மற்றவர்கள் அவரைக் கண்டு சிரிப்பார்கள். **'பஹூனாம் ஜன்மானாமந்தே'** - பல பிறவிகளுக்குப் பிறகுதான் என்னை அடைய முடியும் - என்பதை வேதங்களிலிருந்து எடுத்துக் கூறவும் செய்வார்கள். எனவே கடவுளை உணர்தலைத் தள்ளிப் போட வேண்டும் என்று நினைத்தால், அதற்கான அனுமதியை நாமே கொடுத்துக் கொள்கிறோம்.

எல்லோருமே பி.ஹெச்.டி. படிக்கலாம். அனைவருமே பல்கலைக் கழகத்திலிருந்து பட்டம் பெறலாம் என்று சொன்னால், நாமும் அது மிகக் கடினமானது என்று சொல்லிவிட்டால், ''எனக்கு எந்தக் கல்வியும் தேவையில்லை. ஏனென்றால் அது ரொம்ப

வதற்குக் காரணம் அது ஏற்கெனவே தெரிந்ததால்தான்! உண்மை ஏற்கெனவே நம்மை அடைந்துவிட்டதால், அதை மறுபடி அடைவதென்பது கடினம். நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், நாம்தான் அது! 'அனிச்சன்னபி விமுச்யதே' என்று பகவான் சங்கரர் வெகு அழகாகச் சொல்கிறார்... அதாவது, நாம் விரும்பாவிட்டாலும் நாம் சுதந்திரமானவர்கள். அந்தச் சுதந்திரத்தைப் பயன்படுத்தி நாம் முதலில் நம்மை அறிவோம். நமக்குள்ளே இருக்கும் எண்ணங்களைத் தூய்மைப்படுத்துவோம். கடவுள் நம்முள் குடிபுகுவான்.

(தொடரும்)

# மண்

இலங்கை மண்ணில் தயாராகியிருக்கிற படம். புலம் பெயர்ந்த தமிழர்களுக்கும் பூர்வீக இலங்கைத் தமிழர்களுக்குமான பிரச்னையைப் பத்திச் சொல்லியிருக்காங்க. இலங்கைப் படம்னாலே குண்டு, கலவரம்னே பார்த்துப் பழகின கண்களுக்குக் காதல், வயல்னு காட்டியிருக்கறது ரொம்ப ஆறுதலா இருக்கு. காதலன்கிட்ட தன்னை இழந்து காதலி மாண்டு போறது, பிறந்த மகன் வளர்ந்து அப்பாவைப் பழிவாங்கறதுங்கறதுல பழைய நெடி அடிச்சாலும் ட்ரீட்மெண்ட் புதுசு!

நாயகன், நாயகி இருவருக்கும் இது முதல் படம்தானான்னு ஆச்சர்யமா யிருக்கு. இயல்பு தாண்டவமாடுது அவங்க நடிப்புல. மகனோட வாழ்க்கை திக்குத் தெரியாமல் போச்சேன்னு கதறும்போதும் சரி, அவளுக்காகவே காலம் முழுக்க கலங்கும்போதும் சரி, வாகை சந்திரசேகர் வெளுத்து வாங்கறாரு. 'காதல்' சுகுமார் இத்தனை நாள் இப்படியொரு திறமைய எங்க மறைச்சு வச்சிருந்தாருன்னு தெரியல. அக்கா மகளுக்காகவே உழைச்சுத் தேய்ஞ்சு சோகத்தைச் சம்பாதிச்சுடறாரு. வசனங்கள் பல இடங்கள்ல பளீர்னு கன்னத்துல அறையுது. தமிழனே தமிழனைக் கீழ்த்தரமா நினைக்கற இலங்கை வாழ்க்கையைத் தோலுரிச்சுக் காட்டியிருக்கிற இயக்குநர் புதியவனோட முயற்சிக்குப் பாராட்டுக்கள்.



தன்னோட பாணியில இருந்து மாறுபட்டு வேறொரு விதமான படத்தைத் தந்திருக்காரு விக்ரமன். தமிழ் சினிமாவுக்கான ஃபார்முலா பிசகாம இயக்கியிருக்காரு. அதுல்தான் சிக்கல். தமிழ்சினிமா ஃபார்முலாவைப் பார்த்துப் பார்த்து போரடிச்சதால இந்தப் படமும் சோர்வைத்தான் தருது. பஸ் டிக்கெட் பின்னாடி எழுதற அளவுக்கு ரொம்பச் சின்ன கதை. ஊர் சுத்தற ஹீரோ, தான் போலீஸ்னு சொல்லி, பொண்ணை லவ் பண்றதும், காதலியோட அப்பா வில்லனா மாறிடறதும், வில்லனை எதிர்த்துக் காதலர்கள் ஒண்ணு சேர்றதும்... ரொம்ப ஆயாசமாயிடுது - படம் முடியறதுக்குள்ள.

பரத் தனக்கான பாத்திரத்தை உணர்ந்து நடிச்

# சென்னைக் காதல்



# நெஞ்சில்



பக்கா கமர்ஷியல் படம். லண்டனில் படமாக்கப்பட்டிருக்கு. பரிசுப் போட்டியில ஜெயிச்சு ஃபாரின் போற நவ்தீப், அபர்ணா, அங்க அவங்களுக்குள்ள அரும்புற காதல், மோதல், பிரிவுன்னு கலகலப்பா எடுத்திருக்காங்க. ' போரடிக்காம பொழுதைப் போக்கிட்டு வரலாம். நவ்தீப்புக்குச் சரியான நீனி. உணர்ந்து கவனமா செஞ்சிருக்கார். 'அறிந்தும் அறியாமலும்' படத்துக்குப் பிறகு பேசப்படற கேரக்டர். அபர்ணா இளமை+நடிப்புன்னு கலவையா கலக்கறாங்க. வடிவேலு காமெடி படத்துக்குப் ப்ளஸ். சமயங்கள்ல அதுவே மைனஸாவும் ஆயிடுது. லண்டன் மணீஷின் வில்லத்தனம் மிரட்டுது. நல்ல எதிர்காலம் இருக்கு. காட்சிகளை ரொம்ப நீட்டாம சுருக்கமாகச் சொன்னதுக்காக டைரக்டர் செல்வாவுக்கு 'ஜே' போடலாம். லண்டன் நகரத்தை நேர்த்தியா காட்டியிருக்காங்க.

இடைவேளைக்குப் பிறகு தொய்வு ஏற்படாம இழுத்துப் பிடிச்சுருக்கலாம்; இசை, இன்னும் ஈர்த்திருக்கலாம். இப்படி இன்னும் சில 'லாம்'கள் இருக்கத்தான் செய்யுது - படம் பார்ப்பவர்களோட நெஞ்சில்!

சிருந்தாலும் வெயிட்டான ரோல் இல்லாததால அத்தனையும் வீணாயிடுது. ஜெனிலியா பார்க்க நல்லாருக்கார். அவ்ளோதான்! ராதாரவிக்கு கர்ஜிக்கறதைத் தவிர பெருசா வேலை இல்ல. பரத்துக்கு அப்பாவாக வர்றவர் படுறபாடு செம கொண்டாட்டம். அங்கங்கே தென்படுற சின்னச் சின்ன சிரிப்புகள்தான் படத்தை உயிர்ப்பா காட்டுது. திருவாரூர் குணா கலக்கறார். ஜோஷ்வா ஸ்ரீதர் இசையில ஒரு பாட்டு மட்டும் நல்லாருக்கு.



முத்து கணேஷோட ஒளிப்பதிவுல பாடல்கள் கண்ணுக்குக் குளிர்ச்சி.

இந்த மாதிரி படம் எடுக்க எத்தனையோ டைரக்டர்கள் இருக்காங்க. ஆனா உணர்வுகளால ஊஞ்சல் கட்டி விளையாட விக்ரமன் மாதிரி ஒரு சில பேர்தான் இருந்தாங்க. இந்தப் படம் மூலம் அந்த வரிசைலேர்ந்து விக்ரமன் கழண்டுக்கிட்டாரு. தயவு செஞ்சு உங்க பாணியிலேயே படம் கொடுங்க சார். அதுதான் என்னைக்கும் 'வானத்தைப் போல' நிரந்தரமா நிலைக்கும்!

- லஜ்ஜாவதி



கோணிப்பையில் வெள்ளையாக இமயமலைபோல் குவிந்திருக்கும் உப்புக் கட்டிகளை இப்போதெல்லாம் பார்க்க முடிவதில்லை. சமர்த்தாக, அயோடின் உப்புக்கு மாறிவிட்டோம். ஆனால், எல்லோரும் இன்னும் மாறவில்லை. போதிய அயோடின் உட்கொள்ளாமல் உலகம் முழுவதும் தவிக்கும் மக்களின் எண்ணிக்கை இரண்டு பில்லியன்.

குறிப்பாக கஸகஸ்தான். இங்குள்ள மக்கள் 'அயோடின் சாப்பிடமாட்டேன்' என்று அழிச்சாட்டியம் செய்து கொண்டிருக்கிறார்கள். தம்மாத்துண்டு அயோடின் இல்லாவிட்டால் என்ன குறைந்து விடப்போகிறது என்று எதிர்கேள்வி வேறு! வெறும் 29 சதவீத மக்களுக்கு மட்டுமே அயோடினின் மகத்துவம் தெரிந்திருக்கிறது.

புத்திசாலித்தனம் என்று சொல்கிறோம் அல்லவா... ஐக்யூ...? இந்த ஐக்யூ வளர்வதற்கு அயோடின் அத்தியாவசியம். குழந்தைகளுக்கு அயோடின் கொடுங்கள். கர்ப்பிணிகளுக்கு அயோடின் கொடுங்கள் என்று கிளிப்பிள்ளைக்குச் சொல்வது போல் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ம்ஹூம்... கஸகஸ்தானில் மட்டும் சிறிதும் முன்னேற்றமே இல்லை.

அப்படி என்னதான் பிரச்னை கஸகஸ்தானில். வதந்திகள், வதந்திகளைக் கிளப்பிவிடுவதையே முழு நேரத் தொழிலாக எடுத்துக்கொண்டு செய்பவர்கள் அங்கே அதிகம். 'ஐய்யயோ, அயோடின் சாப்பிடாதீர்கள். அயோடின் சாப்பிட்டால் எய்ட்ஸ் வரும், கேன்ஸர் வரும்' என்கிற ரீதியில் பல வதந்திகள்.

அயோடினுக்காக பார்லிமெண்ட்டைக்கூட கூட்டிவிட்டார்கள். உப்புத் தயாரிப்பாளர்களைக் கூப்பிட்டுப் பேசினார்கள். 'ஐயா, தயவு செய்து அயோடின் சேர்த்துத் தயாரியுங்கள்'. ஆனால் தயாரிப்பாளர்கள் மறுத்துவிட்டார்கள். காரணம்? 'அயோடினை வேற காசு கொடுத்து வாங்கிச் சேர்க்கணுமா? விலை கட்டுப்படியாகாது சாமி.'

என்னென்னவோ செய்து பார்த்துவிட்டார்கள். ஒன்றும் தேறவில்லை இறுதியில், ஓர் ஓவியர் இதற்கான தீர்வை முன் வைத்திருக்கிறார். ஒன்றுமில்லை. அயோடின் மேன் என்னும் கற்பனை கேரக்டரை இவர் வரைந்த

கொடுத்தார். ஓர் ஆஜானுபாகுவான மனிதன். அவன் கையில் ஒரு வீரவாள். டீச்சரிடம் அடி வாங்கும் குழந்தைகளை இந்த கேரக்டர் மீட்டு எடுக்கும்.

இந்த கேரக்டர் சொன்ன செய்தி இதுதான். அயோடின் சாப்பிட்டால் டீச்சரிடம் அடிவாங்கத் தேவையிருக்காது. காரணம், நீங்கள் நன்றாகப் படிக்கத் தொடங்கிவிடுவீர்கள். போதாது? கஸகஸ்தானில் இப்போது அயோடின் உப்பு விற்பனை உச்சத்தைத் தொட்டிருக்கிறதாம்!

லாஹூரில் இருக்கிறான் அந்தச் சிறுவன். வித்தை காட்டுவதுதான் தான் அந்த விஷயம் தெரிய வந்திருக்கிறது. இவனது ஜீனில் ஒரு சிறிய கோளாறு. அதனால், இவனால் வலியை உணர முடியாது. ஆச்சரியத்துடன் அவனது பெற்றோரை வரவழைத்து ஆராய்ந்திருக்கிறார்கள். அவனது அப்பாவின் ஜீனும் அம்மாவின் ஜீனும் இப்படித்தான் அமைந்திருந்தன.

துள்ளிக் குதித்த மருத்துவர்கள், இப்போது வேறொரு திசையை நோக்கி ஆராய்ச்சியை நகர்த்தியிருக்கிறார்கள். ஓர் ஆரோக்கியமான ஜீனை எடுத்துக் கொண்டு, அதை இந்தச் சரியில்லாத ஜீனைப் போலவே மாற்றியமைத்தால், வலி என்னும் சமாசாரம் மறந்து

# 'ஐயோ'டின்..!

அவனுடைய தொழில். வாய் முழுக்கக் கத்திகளைச் செருகிக்கொண்டு சிரிப்பான். கரியைப் பற்ற வைத்து, நெருப்பு பொங்கும்போது அநாயாசமாக நடந்து போவான். செங்கலை உடைப்பான். இன்னும் என்னென்னவோ.

நிறைய பணம் கிடைக்கிறது. ஷோ முடிந்ததும் டாக்டரிடம் சென்று தன்னைக் காண்பித்துக் கொள்வான். கத்தி செருகும்போது ஏதாவது சிறிய பாதிப்பு ஏற்பட்டால் சரி செய்து கொள்வதற்கு. மற்றபடி, இவனுக்குப் பெரிதாக விபத்துகள் நிகழ்ந்ததில்லை. செப்டிக் ஆனதில்லை. கால் கட்டுக் கொண்டதில்லை. மிகக் குறிப்பாக, வலி என்ற உணர்வே இவனுக்கு ஏற்படுவது கிடையாது.

ஆச்சரியமடைந்த மருத்துவர்கள் இவனைப் படுக்க வைத்து மூளையை ஆராய்ந்திருக்கிறார்கள். அப்போது போகுமா?

இதை மட்டும் அவர்கள் தெளிவாகக் கண்டுபிடித்துவிட்டால் மிகமிக முக்கியமான ஆராய்ச்சியாக இது அமைந்து போகும். ஊசி குத்தினாலும் சரி, ஆபரேஷன் செய்தாலும் சரி... வலிக்கவே வலிக்காது.

**மருதன்**



# நீதானம்

குமரனின் அப்பா பரமேஸ்வர் தன் மகனை ஊடுருவிப் பார்த்தார். தலையைக் குறுக்கில் அசைத்துக்கொண்டார்.

"தப்பு! நீ போலீசுக்குத் தகவல் கொடுக்கறதுக்கு முன்னாடி என்கிட்ட சொல்லியிருக்கணும்."

"நீங்க டென்ஷனாயிடுவீங்கன்னுதான்..."

"இப்ப சூழ்நிலையை டென்ஷன் பண்ணிட்டியே. இந்த மாதிரி பணத்துக்குக் கடத்தறவங்ககிட்ட ரொம்ப எச்சரிக்கையா நடந்துக்கணும், குமரன். நம்ம கௌரவத்துக்கு விலை வெச்சிருக்கான். ஒரு கோடி கொடுத்து கௌரவத்தை மீட்டுக்கப் போறமா, இல்லை தப்பு செஞ்சவனைப் பிடிக்கப் போறமா?"

"ரெண்டையும் செய்யலாம்னு தியாகு சொல்றார்."

"எனக்குப் பணத்தைப் பற்றிக் கவலை இல்லை. மஞ்சரியை மீட்டாகணும். கல்யாணத்தை நடத்தியாகணும். இந்தக் கல்யாணம் நடக்கலைன்னா அவமானம்டா!"

"சரிப்பா; பதறாதீங்க."

"உன் போலீஸ் பத்திரமா மஞ்சரியை மீட்டுடும்னு உத்தரவாதம் கொடுக்குமா?"

"அப்படித்தான் தியாகு சொல்றார்."

"நான் நம்பத் தயாரா இல்லை. வெத்துப் பேப்பரைப் பெட்டில போட்டுக் கொண்டு வரச் சொல்லிருக்காரே, அவன் பணத்தைச் செக் பண்ணாம எப்படி மஞ்சரியை அனுப்புவான்?"

"நம்பர் லாக் சிஸ்டம் உள்ள சூட்கேஸ்தான் வேணும்னு கேட்டாரு. அதுல அவரு ஏதோ ஐடியா வெச்சிருக்கணும்."

"எனக்குப் பிடிக்கலை குமரன். அந்தக் கடத்தல்காரன் பணத்தோட எங்க வரணும்னு இன்னும் தகவல் சொல்லலை தானே?"

"சொல்லலை."

"உன் போனுக்குத்தானே தகவல் வரும்?"

"ஆமாம்."

"நல்லதாப் போச்சு. என் ரூம்ல இருக்கற ஸேஃப் வால்ட்ல ஒரு கோடி எடுக்க முடியும், குமரன். உன் ஃப்ரெண்டு போலீசுக்கு போன் செஞ்சி இதை நாங்க பாத்துக்கறோம்னு சொல்லிடு."

"அப்படி எப்படிப்பா சொல்றது? அவர் பலவிதமான ஏற்பாடுகளைச் செஞ்சிட்டாரு. சொல்லாம இருந்திருக்கலாம்; சொல்லி இப்ப எல்லா பிரச்னையும் தெரிஞ்சப்புறம் நாமே சொன்னாலும், அவர் எப்படிப்பா பாதியில விலகுவாரு?"

"கரெக்ட்தான். அவர் ஏதாச்சும் சொதப்பிட்டா காரியம் கெட்டுடும், குமரன். என்ன சொல்லலாம்?"

பரமேஸ்வர் அறைக்குள்ளே நடந்தபடி யோசித்தார். சில விநாடிகளுக்குப் பிறகு அவர் முகம் பிரகாசமானது.

"குமரன், இப்படிச் செய்யலாம்" என்று தன் யோசனையைச் சொல்லத் துவங்கினார்.

தன் கைக் கடிகாரத்தைப் பார்த்தான் ஆகாஷ்.

"சுஜா, இப்ப நீ குமரனுக்குப் பேசினா சரியா இருக்கும்" என்றான்.

"சரி சார்..."

ஆகாஷிடமிருந்து போனை வாங்கிக் குமரனை அழைத்தாள் சுஜா.

பட்டுக்கோட்டை பிரபாகர்

# 22

## தொடர்கதை

"ஹலோ, குமரன்..."

"குமரன், பணத்தை ரெடி பண்ணிட்டியா?"

"பண்ணிட்டேன்."

"போலீசுக்குத் தகவல் சொன்னியா?"

"நிஜமா தகவல் சொல்லலை."

"அப்படியா? சரி, நம்பறேன். இப்ப நான் ஒரு இடம் சொல்றேன். அங்க பணத்தோட வர்றியா?"

"வர்றேன்."

"எதுல வருவே?"

"கார்ல."

"உனக்குப் பின்னாடி ரகசியமா போலீஸ் வந்தா என்ன செய்யலாம்?"

"அதெப்படி வரும்? நான்தான் தகவல் சொல்லலையே..."

"ஆனா மஞ்சரியோடு சேர்த்து கடத்தப்பட்டு நடுவழில இறக்கிவிடப்பட்டவங்க சொல்லிருப்பாங்களே... அவங்க யாரு?"

"மஞ்சரியோட அண்ணனும், அண்ணியும்."



"இந்த நிமிஷம் மஞ்சரி கடத்தப்பட்ட விஷயம் அந்த ரெண்டு பேர், நீ தவிர வேற யாருக்கும் தெரியாதா?"

"அது... வந்து..."

"சொல்லு!"

"எங்கப்பாவுக்குத் தெரியும்."

"அவர் என்ன சொன்னார்?"

"பணம் கொடுக்கலாம், கௌரவம் தான் முக்கியம்னு சொன்னார். மஞ்சரியைப் பத்திரமா ஒப்படைக்கணும்னு உங்களைக் கேட்டுக்கச் சொன்னார்."

"வெரிகுட். பாண்டிச்சேரிலேர்ந்து மாமல்லபுரத்துக்கு எவ்வளவு நேரத்துல உன்னால வர முடியும்?"

"ஒண்ணே கால் மணி நேரத்துல வரலாம்."

"ஒண்ணே கால் மணி நேரம் கழிச்சு நானே கூப்பிடுவேன். அப்ப தகவல் சொல்றேன்."

"இன்னொரு விஷயம். நீ பைக்குல வா."

"பைக்லயா? திரும்ப மஞ்சரியைக் கூட்டிட்டு வரணுமே..."

"பைக்லயே திரும்பிக் கூட்டிட்டுப் போ!"



"யாரங்கேன்னு கூப்பிட்டா, நான்தான்னு பதில் வருது மந்திரியாரே!"

"தங்கள் மனசாட்சியா இருக்கும் மன்னா!"

- எஸ். தமிழ்மணி





"நான் கார்லயே வர்றேனே..."

"நோ! காருக்குள்ளே யாராவது போலீஸ்காரங்க ஒளிஞ்சிட்டு வர வாய்ப்பிருக்கு. நீ பைக்லதான் வர்றே!"

"சரி."

"எந்த ட்ரிக்கும் வெச்சுக்காதே! மஞ்சரியை அப்புறம் பஞ்சு பஞ்சா சிதறடிச்சிடுவோம். ஆள் பலம், ஆயுத பலம் இல்லாம நாங்க இந்தத் திட்டத்துல இறங்கலை. ஓகே. புறப்படு!"

பேசி முடித்து செல்போனைத் திருப்பிக் கொடுத்த கஜாவின் தோளில் தட்டினான் ஆகாஷ்.

"சபாஷ்... அடுத்த பிளான்– சென்னைல பொய்யான பெயர்ல புக் செஞ்சு எடுத்துட்டு வந்திருக்கோமே இந்தக் காரை எந்த ஸ்பாட்ல நிறுத்தணும்னு சொல்றேன். மஞ்சரியை இவங்க கொண்டு வந்த அதே ஆம்புலன்ஸ் வண்டிக்குள்ளே வைச்சுதான் டீலிங் நடத்தப்போற ஸ்பாட்டுக்குக் கொண்டு போறோம்."

"சரி சார்!"

தன் சூட்கேஸைத் திறந்து இரண்டு மங்கி குல்லாக்களை எடுத்தான் ஆகாஷ்.

"இதைப் போட்டுக்கிட்டு மூக்குக்குக் குறுக்கே கர்சீப் கட்டிக்கிட்டா நம்ம அடையாளம் தொலைஞ்சிடும்."

கண்ணாடி முன்பு நின்று ஆகாஷ் மங்கி குல்லா அணிந்து, கர்ச்சீப் கட்டிக் கொண்டான். அதைப் போலவே கஜாவும் செய்து கொண்டான்.

"சார், விஷால், பாண்டி?"

"அவங்க நம்மோட ஆம்புலன்ஸ் வண்டிக்குள்ள இருக்கட்டும். எவ்வளவு பணம் கேட்ருக்கோம்னு அவங்களுக்குத் தெரியுமா?"

"தெரியாது சார்."

"தெரிய வேண்டாம். நடுவுல முழிச்சுடக் கூடாது; நான் கொடுத்த மயக்க ஊசியை இன்னொரு டோஸ் அந்த மஞ்சரிக்குப் போட்டுடு."

"சரி சார்."

கஜா மஞ்சரியைப் படுக்க வைத்திருந்த அறையைத் திறந்து உள்ளே வந்தான்.

கட்டிப் போடப்பட்ட அதே நிலையில் கிடந்தான் மஞ்சரி. டிஸ்போசபிள் சிரிஞ்ச் எடுத்து அதில் மருந்தை ஏற்றிக் கொண்டு அவளை நெருங்கினான் கஜா.

இன்ஸ்பெக்டர் தியாகு தொடர்ந்து போனில் பேசிக் கொண்டே இருந்தார். நிறுத்தினார்.

"நான் புறப்படறேன் சார்" என்றான் நம்பர் லாக் சிஸ்டத்துடன் உள்ள சூட்கேசை கையில் எடுத்துக் கொண்ட குமரன்.

''மாமல்லபுரம் முழுக்க மஃப்டில எங்காளுங்களை நிறுத்தச் சொல்லிட்டேன்; நானும் வந்துடுவேன். நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கா?"

"இருக்கு; பயமா இருக்கு, சார்."

"நான் இருக்கேன். மஞ்சரிக்கு எதுவும் ஆகாது; பயப்படவே வேணாம். டயம் ஆயிடுச்சு புறப்படலாம்."

அடுத்த சில நிமிடங்களில் சாதாரண அம்பாஸிடர் காரில் மஃப்டி உடையில் தியாகுவும், சப் இன்ஸ்பெக்டரும் மாமல்ல புரம் நோக்கி கிழக்குக் கடற்கரைச் சாலையில் சென்று கொண்டிருக்க...

இருநூறு மீட்டர் இடைவெளியில் காருக்குப் பின்னால் ஃபைக்கில் சூட் கேஸுடன் குமரன் சென்று கொண்டி ருந்தான்.

அலைகளுக்கு அருகில் இருட்டுத் தீவுக்குள் பதுங்கியிருந்த ஒரு சவுக்குத் தோப்புக்குள் அந்த ஆம்புலன்ஸ் வண்டி நின்று கொண்டிருந்தது.

உள்ளே கட்டப்பட்ட நிலையில் மயக் கத்தில் மஞ்சரி. தவிர விஷால், பாண்டி. ஆம்புலன்சின் டிரைவிங் சீட்டில் கஜா. அவனுக்கு அருகில் ஆகாஷ். இருவரும் மங்கி குல்லா கெட்டப்பில் இருந்தார்கள்.

தன் வாட்ச் பார்த்துத் தலையசைத்து செல்போன் தர, கஜா பேசினான்.

"குமரன்!"

"வந்துட்டேன்; மாமல்லபுரம் வந்துட் டேன்."

"மாமல்லபுரத்துல எங்க இருக்கே?"

"உள்ளே ஐந்து ரதம் பகுதில இருக் கேன்."

"ஏன்? அங்கதான் போலீஸ் எங்களை மடக்கறதுக்குச் சௌகரியமா இருக்குமா?"

"அய்யய்யோ! அதெல்லாம் இல்லை."

"பொய் சொல்லாதே... இப்போ மாமல்லபுரம் முழுக்க மஃப்டில போலீஸ் சுத்திக்கிட்டிருக்கும். டீக்கடையில, போன் பூத்துல, பிளாட்ஃபாரத்துல எங்கயும் இருப்பாங்க; எங்களுக்குத் தெரியும். அதனால..."

"அதனால?"

"மாமல்லபுரம் நம்ம டீலிங் ப்ளேஸ் இல்ல! நீ என்ன பண்றே? சென்னை ரோட்ல வர்றே. ரெண்டாவது கிலோ மீட்டர்ல ரைட்ல கதிரவன் அவென்யூன்னு ரோடு போகும். அதுல திரும்பறே. அங்க உள்ளே வந்தா ஒரு சவுக்குத் தோப்பு வரும். அங்க வந்துடு" என்று வைத்தான்.

ஐந்து ரதம் பகுதியில் ஒரு பாறைக் குப் பின்பாக ஒளிந்து கொண்டு எக்ஸ்ட்ரா மைக்ரோ ஸ்பீக்கர் சிஸ்டம் மூலமாக உரையாடல் முழுக்க கேட்டுக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் தியாகு நிமிர்ந்து, குமரனைப் பார்த்து, 'சரி... போங்க' என்று சைகை செய்தார்.

சவுக்குத் தோப்புக்குப் புறப்பட்டான் குமரன்.

(தொடரும்)



''இந்த மாதிரி வீரர்கள் கதையைக் கேட்டா, நீயும் பிற்காலத்தில் பெரிய வீரனாகிடுவாய்...''

''பின்னே ஏம்மா பாட்டி மட்டும், அப்பாவுக்கு இந்த மாதிரிக் கதைகளைச் சொல்லலே!''

- வெ.சீதாராமன்

# ஐ.நா.வின் உடனடித் தேவை!

- ஜி.எஸ்.எஸ்.



வருடக் கடைசியில் ஐ.நா. சபைக்கு டாட்டா சொல்கிறார் கோஃபி அன்னான். அந்த இடத்தில் அமரப்போகும் பன் கி முன் சமீபத்தில் ஐ.நா. சபையில் உறுதிமொழி எடுத்துக் கொண்டார். அப்படியே பொதுச்சபை வளாகத்தில் ஒரு சொற்பொழிவு.

தூதரகப் பதவி இவரது நீண்ட வருடக் கனவு. அமெரிக்க செஞ்சிலுவை சங்கம் நடத்திய ஆங்கில மொழி அறிவுப் போட்டியில் கலந்துகொண்டு வெற்றிபெற்று அப்போதைய அமெரிக்க அதிபர் ஜான் கென்னடியைச் சந்தித்தபோதே அந்த ஆசை இவர் மனத்தில் அரும்பி விட்டதாம்.

முப்பத்தைந்து வருடங்களுக்குப் பிறகு ஐ.நா. பொதுச் செயலாளர் ஆகியுள்ள ஆசியர் (தேர்தலில் ஆரம்ப கட்டத்தில் போட்டியிட்ட நம் சசி தரூரை விலக வைத்தவர்). இன்னும் இரண்டு ஆண்டுகளுக்கு இந்தப் பதவி நிலைக்கும்.

"உயர்ந்த கொள்கைகள் மற்றும் பெருமைப் படத்தக்க எண்ணங்கள் கொண்டவர்" என்று பழையவரைப் பாராட்டியிருக்கிறார் புதியவர்.

அண்மையில் ஒரு நிருபர் "அமெரிக்கா, பிற நாடுகள் தொடர்பான தனது அணுகு முறையை மாற்றிக் கொள்ள வேண்டும்" என்று கோஃபி கூறியதை நினைவுபடுத்த, "அது அவரது தனிப்பட்ட மதிப்பீடு" என்று அவசரமாகப் பதில் அளித்திருக்கிறார். அமெரிக்க ஆதரவு இல்லாவிட்டால் இந்தத் தென் கொரியருக்கு இந்த உயர்ந்த பதவி கிடைத்திருக்காது.

"மத்திய கிழக்கு நாடுகள் பிரச்னைதான் மிகவும் சீரியஸாக இருக்கிறது. அதில் எனது உடனடி கவனம் இருக்கும். 'உலக வரைபடத்திலிருந்து இஸ்ரேலை நீக்கிவிட வேண்டும்' என்ற ஈரானின் பேச்சு குறித்து, "ஏற்றுக் கொள்ள முடியாத ஒன்று" என்றெல்லாம் சட்டென்று தம் கருத்துகளை உதிர்த்தவர், ஒரு கேள்விக்கு மட்டும் பதில் சொல்ல முடியாமல் திணறினார்! காரணம், அது பிரெஞ்சில் கேட்கப்பட்டதுதான். மொழிபெயர்க்கப்பட்ட பிறகு அந்தக் கேள்வி உடனடியாகச் சிரிப்பலைகளை எழுப்பியது. "ஐ.நா.வின் இரண்டாவது அதிகாரபூர்வ மொழியாக பிரெஞ்சு மொழி தொடருவதன் காரணத்தைத் தெரிந்து கொள்ளலாமா?" என்பதுதான் அந்தக் கேள்வி!

சரி, பன் கி மூனின் கண்ணோட்டம் எப்படி இருக்கப் போகிறது? "நான் ஒரு செயல் திட்டத்தோடு வந்திருக்கிறேன். உறுப்பினர் நாடுகளுக்கிடையே ஐ.நா.வின் மீது நம்பிக்கை வரவழைப்பேன்" என்றிருக்கிறார். அதுதான் உடனடித் தேவை. காரணம், தேர்தலுக்கு முன் தம் அயலுறவுப் பதவியைச் சாக்காக வைத்துக் கொண்டு, பல்வேறு நாடுகளுக்கு (முக்கியமாக வளரும் நாடுகளிடம்) நிதியுதவி அளிப்பதாகக் கூறி, வாக்கு சேகரித்தார் என்ற குற்றச்சாட்டு இவர் மீது உண்டு!




# பரவத் துடிக்கும் B.T. நெல்... பதறித் துடிக்கும் விவசாயிகள்...

ஆந்திராவில் விவசாயிகள் குடும்பம் குடும்பமாகத் தற்கொலை செய்து கொண்டது வறுமையினாலும் வாங்கிய கடனை அடைக்க முடியாததாலும்தான்! விவசாயிகளின் இந்த வறுமைக்கும் கடன் சுமைக்கும் காரணம் அவர்கள் பயிரிட்ட Bt பருத்தி. இன்று அதே நிலைமை நம் தமிழக விவசாயிகளுக்கும் நேரக்கூடிய அபாயச் சூழல். கோவை, ஆலந்துறை கிராமத்தில் சோதனை முயற்சியாக Bt நெல் பயரிட, வெகுண்டெழுந்து, அதனை அழித்துள்ளனர் அக்கிராம விவசாயிகள். Bt நெல் குறித்த அச்சத்தோடும் ஆவேசத்தோடும் நம்மிடம் பேசினர் விவசாயிகள்.

"Bt விதை நெல், அதிகமான உற்பத்தியைத் தருவதைப்போல் தோன்றும். ஆனால் நம் பாரம்பரிய விதை உற்பத்தியோடு ஒப்பிடும்போது உற்பத்தியில் சிறிய அளவிலேயே வித்தியாசம் இருக்கும். Bt பருத்தியோ, நெல்லோ... இவற்றுக்கு இடப்படுகிற இடுபொருட்களான உரம், பூச்சிக் கொல்லி, பூஞ்சாணக் கொல்லிகளின் அளவு, நம் விதைகளைவிட பல மடங்கு விலை அதிகம். சில கிராம் விதையின் விலையே நூற்றுக்கணக்கில் இருக்கும். இதெல்லாம் கட்டுப்படியாகாமல்தான் ஆந்திராவில் நிறைய விவசாயிகள் தற்கொலை செஞ்சுக்கிட்டாங்க. அந்த நிலைமை நமக்கு வரக்கூடாதுன்னா பரிசோதனைக்காகக் கூட Bt நெல்லை அனுமதிக்கக் கூடாது" என்றார் மயிலாடுதுறை மேலாநல்லூர் இயற்கை விவசாயி பாலாஜி சங்கர்.

காவிரிப் பாசன விவசாயிகள் நலப் பாதுகாப்புச் சங்கத்தின் செயல் தலைவர் மகாதானபுரம் ராஜாராம், Bt நெல்லில் அடங்கியுள்ள அரசியலை விவரித்தார்.

"Bt நெல்லோ, பருத்தியோ, காய்கறியோ எதுவாக இருந்தாலும் அதனுடைய ஒரே உற்பத்தியாளர் அமெரிக்க மான்சான்ட்டோ கம்பெனிதான். தப்பித் தவறி நாம் அவர்களை உள்ளே விட்டால், இந்திய விவசாயிகள் காலத்துக்கும் அவர்களுக்கு அடிமையாக வேண்டி வரும். ஏனென்றால் இந்நெல்லைத் தனியே எடுத்து



வைத்து, அடுத்த பருவத்துக்கு விதை நெல்லாகப் பயன்படுத்த முடியாது. இன்றைக்கு கிராமங்களில் உற்பத்தியாகிற நெல்லில் கொஞ்சம் எடுத்து வைத்து அடுத்த பருவத்துக்குப் பயன்படுத்துகிறோம். இதற்காக நாம் நிறைய செலவழிப்பதில்லை. ஆனால் Bt நெல்லுக்கு மூட்டைக்குப் பல ஆயிரங்கள் செலவு செய்ய வேண்டி வரும். ஒவ்வொரு முறையும் இந்த கம்பெனியிடமிருந்து மட்டுமே நாம் விதை நெல்லை வாங்க வேண்டும். விதைத்ததிலிருந்து அறுவடை செய்யும் வரை இதற்குப் பல மடங்கு செலவு செய்ய வேண்டும். இந்தியா விவசாய நாடு என்பதால், மான்சான்டோ தன் கைவரிசையை இங்கே காண்பிக்கப் பார்க்கிறது. இப்போதே நாம் விழித்துக் கொள்ளாவிட்டால்... நம்மை யாரும் காப்பாற்ற முடியாது. அரசாங்கம் இதை அனுமதிக்கவே கூடாது" என்கிறார்.



• பாலாஜி சங்கர்

**த**மிழக விவசாயிகள் சங்கத்தின் மாநிலச் செயலாளர் பெரம்பலூர் ராஜா சிதம்பரம் கூறுகையில், "மரபணு மாற்றம் செய்யப்பட்ட பி.டி. ரக விதைகள் குறித்து, மாநில - மத்திய அரசுகள் இடையே நிலையான கொள்கை ஏதுமில்லை. ஆளுங்கட்சிகள் எதிர்கட்சியாக இருக்கும் போது மட்டுமே இதைப் பற்றிப் பேசுகின்றன. அவர்கள் ஆளுங்கட்சியாக மாறிவிட்டால் எப்போதும்போல் மறந்துவிடுகிறார்கள். கடந்த ஆறேழு வருடங்களாக உள்ள இந்தப் பிரச்னையைத் தீர்க்க, விவசாயிகளுக்குத் தெளிவு படுத்திட, மத்திய - மாநில அரசுகள் எதுவும் செய்யவில்லை. இனி மேலாவது கட்டாயம் செய்ய வேண்டும். உலக மயமாக்கலை முன்னிட்டு நடக்கிற ஆபத்துகளில் இதுவும் ஒன்று. பாராளுமன்றத்தில் இந்திய விதைகள் சட்டத்தில் இதற்கான திருத்தங்களைக் கொண்டுவர வேண்டும். இல்லையேல், பிற பாரம்பரியங்கள் தொலைந்து கொண்டிருப்பதைப்போல் பாரம்பரிய விதைகளும் அழிந்துவிடும்."

**"பாரம்பரிய விதைகளினால் விளைந்து வரும் உணவுப் பொருட்களையும், நம்முடைய விளை நிலங்களின் வீரியத்தினையும் நாம் இழந்துவிடுவோம்."**



• இ.கனகசபை

**இ**ப்பிரச்னை குறித்து இயற்கை வேளாண் விஞ்ஞானி நம்மாழ்வாரிடம் கேட்டபோது, "இந்திய அளவில் பாரம்பரியமாக ஒரு லட்சத்து நாற்பதாயிரம் நெல் வகைகள் இருந்ததாக வரலாற்றுச் செய்திகள் கூறுகின்றன. 1965-க்குப் பின்னர் நிகழ்த்தப்பட்ட பசுமைப் புரட்சியின் விளைவாக, வெறும் பத்துப் பன்னிரண்டு நெல் வகைகள் மட்டுமே தற்போது நம்மிடம் தங்கியிருக்கின்றன. இதில் மரபணு மாற்றம் செய்யப்பட்ட பி.டி. நெல்

விதைகள் நம் விளை நிலங்களுக்குள் புகுந்துவிட்டால், Erosion of bio diversity எனப்படும் உயிரினப் பன்மைச் சிதைவை நாமே வரவேற்பது போலாகிவிடும். Bt எனப்படும் பேசில்லஸ் துரின் ஜியன்ஸிஸ் (Bacillus Thuringensis) என்கிற பாக்டீரியா, முழுமையான நச்சுத் தன்மை உடையது. அந்த நச்சினை நம்முடைய பாரம்பரிய நெல் விதைக்குள் உட்செலுத்தி மரபணு மாற்றம் செய்யப்பட்ட Bt நெல்விதைகளையே நம் வயல்களில் விதைப்பதால், நெற்பயிர்களில் தண்டுப் புழுக்களின் சேதம் ஏதும் நேராது எனச் சொல்லப்படுகிறது. ஆனால் விதையிலேயே நஞ்சூட்டப்படுவதால் அந்த அளவுக்கு நெற்பயிர்களில் நஞ்சுத்தன்மை பரவியிருக்கும். அந்த நெற்பயிர்களின் வைக்கோல், கால்நடைகளுக்கும் நச்சுத் தீவனமாகவே ஆகிவிடும். Bt விதைகளினால் விளைந்த உணவுப் பொருட்களை உட்கொள்ளும் நபர்களுக்கு உடலில் அலர்ஜி ஏற்படுகிறதென பல ஆய்வுகள் கூறுகின்றன. இதன் விளைவாகவே, ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் Bt விதைகள் முழுமையாகத் தடை செய்யப்பட்டுள்ளன. மரபணு மாற்றம் செய்யப்பட்ட விதைகளினால், காலப்போக்கில் நம் விளைநிலங்களில் மரபணு மாசு நிறைந்துவிடும். இயற்கை விவசாயம் வாயிலாக பாரம்பரிய விதைகளினால் விளைந்து வரும் உணவுப் பொருட்களையும், நம்முடைய விளை நிலங்களின் வீரியத்தினையும் நாம் இழந்து விடாதிருக்க, மரபணு மாற்றம் செய்யப்பட்ட Bt விதைகளை நம் விவசாயிகள் ஒரு சதவிகிதம்கூட அனுமதிக்கக் கூடாது" என்றார்.


• ராஜா சிதம்பரம்

*செய்திச் சித்திரம் :* ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

கழுத்திலே பெரிய கழலைகளோடு இருப்பவர்களைப் பார்த்திருப்பீர்கள்! இந்தக் கழலைகள், உடலில் எத்தனையோ பாகங்கள் இருக்க, குறிப்பாக கழுத்தில் ஏன் வருகின்றன? வேறொன்றுமில்லை! கழுத்தில் 'ஆடம்ஸ் ஆப்பிள்' என்று சொல்லக்கூடிய பகுதிக்கு அடியிலே இரண்டு அங்குலம் அளவில் தைராய்டு சுரப்பி ஆங்கில எழுத்தின் 'H' வடிவத்தில் காணப்படுகிறது. இந்த சுரப்பியைப் பார்க்கவோ, உணரவோ முடியாது. வீக்க மடைந்தால்தான் கண்டுபிடிக்க இயலும். இப்படி இந்த சுரப்பி வீங்குவதற்கு 'காய்டர்' என்று பெயர்.

தைராய்டு சுரப்பி மூலம் உற்பத்தியாகும் ஹார்மோன் நம் உடலிலுள்ள தாதுக்களின் பரிணாமத்தை நிர்ணயிக்கிறது. இந்த ஹார்மோன் சுரக்கவும், நன்கு இயங்கவும் அயோடின் உப்பு அவசியமானது. தைராய்டு சுரப்பி தன் இயக்கத்துக்கு ஹைபோதாலமஸையும், பிட்யூட்டரி சுரப்பியையும் சார்ந்து உள்ளது. பிட்யூட்டரி சுரப்பி THYROID STIMULATIVE HORMONE -ஐச் சுரக்கிறது.

சுரப்பி ஹார்மோனை அதிக அளவில் சுரந்தால் அதற்கு 'HYPER THYROIDISM' என்றும் அளவுக்குக் குறைவாக சுரந்தால் 'HYPO THYROIDISM' என்றும் பெயர். ஆண்களைக் காட்டிலும் பெண்களிடம் தைராய்டு சுரப்பி குறைவாகச் சுரக்கிறது.

ஆயுர்வேதத்தில், ஆங்கில மருத்துவத்தைப் போல் ஹார்மோன், சுரப்பிகள் என்று தனியாகப் பார்க்காமல் தாது அக்னியின் அம்சமாகவே பார்க்கிறோம். சரி, தைராய்டு சுரப்பி குறைவாகச் சுரந்தால் என்னவாகும்?

- நாடித் துடிப்பு குறைவடையும்.
- தொண்டையில் கரகரப்பு ஏற்படும்.
- பேச்சு மெதுவாகும்.
- கண் புருவமுடி உதிரும்.
- குளிர்ச்சியை உடல் தாங்கிக் கொள்ளாது.
- மலச்சிக்கல் ஏற்படும்.
- எடை அதிகமாகிக் கொண்டே போகும்.
- முடி வறட்சியடையும்.
- மன அழுத்தம் உண்டாகும்.
- மறதி ஏற்படும்.

தைராய்டு சுரப்பி அதிகமாகச் சுரந்தாலும் பாதிப்புகள் உண்டாகும்,

- இதயப் படபடப்பு வரும்.
- இரத்தக் கொதிப்பு அதிகரிக்கும்.
- கை, கால்கள் வியர்க்கும்.
- நரம்புத் தளர்ச்சி ஏற்படும்.
- அதிகமாகப் பசி எடுக்கும்.
- தூக்கத்தில் தொந்தரவுகள் இருக்கும்.
- அடிக்கடி மலம் போகும்.
- வயிற்றுப் போக்கு உண்டாகும்.
- பலவீனம் ஏற்படும்.
- தோலில் மாற்றங்கள் ஏற்படும்.
- கண் பருத்து வெளியில் வரலாம்

இதனை EX OPTHALMIC GOITRE (கலகண்டம்) என்கிறோம்.

இரத்தத்தில் தைராய்டு ஹார்மோனின் அளவைப் பொருத்து, தைராய்டு சுரப்பியின் இயக்கத்தை பிட்யூட்டரி சுரப்பி அதிகரிக்கவோ அல்லது குறைக்கவோ செய்கிறது.

T4, T3, TSH ஆகியவை தைராய்டு ஹார்மோன்கள், T4 என்கிற தைராக்ஸின் ஹார்மோன், நம் உடலிலுள்ள தாது பரிணாமத்தை அதிகப்படுத்துகிறது. நம் உடலில் ஹைபோதாலமஸ், பிட்யூட்டரி தைராய்டு ஆகிய சுரப்பிகள், அவற்றை இணைக்கும் புரதங்கள் கல்லீரல் அனைத்தும் சீராக இயங்க வேண்டும். இவை




டாக்டர் எல்.மஹாதேவன்



# ஆடம்ஸ் ஆப்பிள் ஆபத்து!

அனைத்தும் சீராக இயங்குகின்றனவா இல்லையா என்று எப்படித் தெரிந்து கொள்வது? நம் இரத்தத்தில் T4, T3, TSH நிலை என்ன என்கிற பரிசோதனையை வெறும் வயிற்றில் செய்து அறிந்துகொள்ள வேண்டும்.

இதோடு, தைராய்டு ஆண்டிபாடிஸ் என்ற பரிசோதனையும் செய்யலாம்.

நவீன மருத்துவத்தில், RADIO ACTIVE அயனியைப் பயன்படுத்தி தைராய்டு சுரப்பியை ஸ்கேன் செய்கிறார்கள்.

தைராய்டு அழற்சி மட்டுமில்லாது, நான்கு வகையான தைராய்டு கேன்சர்களும் வரலாம். இந்த கேன்சர் தலையில் ரேடியேஷன் சிகிச்சை எடுத்துக் கொண்டவர்களுக்கு வருவதற்கான வாய்ப்புகள் அதிகம். இக்கட்டி வலியில்லாத கட்டிகளாகக் கரந்திகளைப் போல தைராய்டில் உருவாகும்.

எங்களிடம் கண்மணி என்ற இருபது வயதுடைய பெண் வந்திருந்தார். அவருக்கு முகம் வீங்கி இருந்தது. மேலும் மாதவிடாய்க் கோளாறுடனும், குளிர்ச்சியைத் தாங்கிக் கொள்ள முடியாத நிலையிலும் இருந்தார். இரத்தத்தில் கொழுப்பு அதிகம் இருந்தது. இவருக்கு வந்த ஹைப்போ தைராய்டிஸம் கபத்தைச் சார்ந்தே வந்துள்ளது. கபத்துக்கும், கொழுப்புக்கும் தொடர்பு உண்டு. கபத்திலும் கொழுப்பிலும் இருக்கின்ற அக்னியானது சீராக இயங்காத காரணத்தால்தான் இந்நோய் வருகின்றது. இதனைக் கபசோபம் என்கிறோம்.

இவரைக் குணப்படுத்த மாவிலங்கம் சேர்த்த வருணாதி கஷாயத்தைக் கொடுத்தேன். பிறகு சுக்கு, மிளகு, திப்பிலி, கோரைக் கிழங்கு, கொடுவேலி மற்றும் இரும்புச் சத்து சேர்த்த நவாயஸ சூரணத்தைக் கொடுத்தேன். இதோடு சாரணை வேர், அபாமார்கம் என்கிற நாயுருவி ஆகியவற்றை வைத்து ஒரு லிட்டர் தண்ணீரில் பானம் செய்து கொடுத்தேன். இச் சிகிச்சையினைத் தொடர்ந்து மூன்று.

நான்கு மாதங்கள் செய்ததால் TSH-ன் அளவு நார்மலானது. TSH நார்மலானதால் மாதவிடாய்க் கோளாறு சரியானது. இதனை தைராய்டு பிரச்னையாகப் பார்க்காமல் கபத்தின் பிரச்னையாகப் பார்த்து சிகிச்சை அளித்தோம்.

சிவகாமி என்ற நாற்பத்தைந்து வயதுடைய பெண் வந்திருந்தார். அவரால் பொறுமையாகப் பேசக்கூட இயல



• கடுக்காய்

வில்லை. அவருக்குத் தைராய்டு சுரப்பி வீங்கியிருந்தது. கை, கால்கள் நடுங்கின. நாடித் துடிப்பு நூறுக்கும் மேலாக இருந்தது (சாதாரண நாடித் துடிப்பு ஒரு நிமிடத்துக்கு எழுபத்திரண்டுமுறை). கண்மணிக்குக் கபத்தால் பிரச்னை; சிவகாமிக்கோ வாதப் பித்தத்தால் பிரச்னை. வாதப் பித்தங்களுக்கு மதுர ரஸங்களைக் கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். இவருக்குத் திராட்சை சேர்ந்த திராக்ஷாதி கஷாயமும், பாலமுதப்பன் கிழங்கு சேர்ந்த விதார்யாதி கஷாயமும், கல்யாணக கிருதமும், க்ஷீரபலா நஸ்யமும் (மூக்கில் மருந்து விடுதல்) செய்து தலைக்கும் க்ஷீரபலா கொடுத்தேன். இவற்றைச் செய்த பின்பு 'க்ஷீரவஸ்தி' எனும் எனிமா (மலம் வெளியேற்றும் சிகிச்சை) அளித்தவுடன் நல்ல பலன் கிடைத்தது. பித்தம், வாதம் தணிந்து அமைதி அடைந்தார்.

AUTO IMMUNE வகையைச் சார்ந்த ஹேஷிமோட்டோஸ் தைராய்டைட்டிஸ் நோய் தாது பாகம் சார்ந்தது. இதற் சிந்தில், சுக்கு, கடுக்காய் போன்றவை சேர்ந்த அமிர்தோத்ரம் கஷாய தூஷிவிஷாரி குளிகை, சாரணை வே சேர்ந்த் புனர்னவாதி கஷாயம் போ றவை நல்ல பலனைத் தரும்.

ஹைப்பர் தைராய்டிஸத்துக்கு வெ தாமரையால் செய்யப்பட்ட பஞ்சாரவி க்ருதம் பலன் தரும். மேலும் தாமை பால் கஷாயமும் நல்ல பலனைத் தரு பால் முதப்பன் கிழங்கு அடபதிய சங்குபுஷ்பி வேர் ஆகிவற்றைப் பா கஷாயம் வைத்துக் குடிப்பதும் நல் நிவாரணத்தைத் தரும்.

ஹைப்போ தைராய்டிஸத்துக்கு கொள்ளு, மணத்தக்காளிக் கீரை போ றவை பலனைத் தரும். மந்தாரை இலை பட்டையைக் குடிநீர் வைத்துக் கொடு தால் அதிக பலன் கிடைக்கும். கொ னைப் பட்டையைக் கஷாயம் வைத்து குடிக்கலாம். கடுக்காயினால் தயாரிக் பட்ட தசமூல ஹரீதகி லேகியம் ப நல்லது.

இவற்றையெல்லாம்விட எளிதா விஷயம் அயோடின் கலந்த உப் உட்கொள்வது. தைராய்டு பிரச்னைக இது தடுக்கும். தைராய்டு சுரப்பி பிரச்னை என்று தெரிந்தால் முறையா பரிசோதனைகளை மேற்கொண் ஆரம்ப நிலையிலேயே சிகிச்சை அளி வேண்டும்.

(தொடரு

## தன்வந்தரி டாலர் பரிசு போட்டி எண்: 9

**கொ**ள்ளு அல்லது மண தக்காளிக் கீரையைப் பயன்படுத்தி செய்யும் எளிய உணவுகளை எழு அனுப்புங்கள். சிறந்த குறிப் களுக்கு **டாக்டர் எல். மஹாதேவ** **தன்வந்தரி டாலர்** பரிசளிப்பா இரண்டாவது பரிசாக **தேவமருந்** **முதல் பாகம்** புத்தகம் வழங்கப்படு

கடைசித் தேதி : 1.1.2007

ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.



# விரலெனும் வீணை!

மொழியின் அழகு
உச்சரிக்கப்படாத வார்த்தைகளில்
ஒளிந்திருப்பதை
உணர முடிந்தது
வாய் பேச இயலா
பள்ளிச் சிறுவர்களின்
விரல் மொழிக் கவிதையைக்
காண நேர்கையில்...

வரி வடிவமற்ற
இவர்களின் கவிதைக்குள்
எத்தனை வார்த்தைப் பரிமாற்றங்கள்!
விரலெனும்
வீணையை மீட்டியபடி
வென்றுகொண்டேயிருக்கிறார்கள்
ஒலி தர மறுத்த இயற்கையை.

**மீ.உமாமகேஸ்வரி**

களில் பின்தங்கியே இருக்கிறது?

! மக்கள் தொகைக்கும் ஒலிம்பிக் பதக் கங்களுக்கும் சம்பந்தமே இல்லை. இங்கே கிரிக்கெட், டென்னிஸ் போன்ற விளை யாட்டுகளில் காண்பிக்கப்படும் ஆர்வம், ஓட்டப்பந்தயம், தடை ஓட்டம், உயரம் தாண்டல் போன்றவற்றில் காண்பிக்கப் படுவதில்லை. ஆனால், இவை போன்ற பந்தயங்கள்தாம் அதிக ஒலிம்பிக் மெடல் களைப் பெற்றுத் தரும். விருப்பு - வெறுப்பு இன்றி, நம்பிக்கை நட்சத்திரங்களைக் கண்டுபிடித்துச் சிறப்புப் பயிற்சி தந்தால் முன்னேற்றம் இருக்கும்.



• ஆயத்த அறிக்கை!

# தேசிய அரசியலில் இறங்கப்போகிறாரா

● வி.தேவராசு, திருவெறும்பூர்

? "ஸ்ரீரங்கத்தில் பெரியார் சிலையை வேறு இடத்தில் வைப்பதே புத்திசாலித் தனம்" என்கிறாரே ஜெயலலிதா?

! அடுத்து திட்டமிடப்பட்டுள்ள நூற்று சொச்சம் பெரியார் சிலைகளை வீம்புக் காகவே கோயில்கள் முன்னால் வைக் காமல் இருப்பது அதை விடவும் புத்தி சாலித்தனம். பெரியாரைச் சரியாகப் புரிந்து கொண்டவர்கள் இப்படி நடந்து கொள்ளமாட்டார்கள்.

● நீ.முத்துக்குமார், திருச்சி - 102

? மக்கள் தொகையில் முண்டியடித்து முன்னேறி வந்துள்ள இந்தியா ஏன் ஒலிம்பிக் போன்ற சர்வதேசப் போட்டி

● எம்.பாஸ்கர், திண்டுக்கல்

? 'காங்கிரஸ் ஆளும் மாநிலங்களில் ஆட்சியில் உள்ளவர்கள், கட்சியின் ஆணி வேரான தொண்டர்களை மதிக் கக் கற்றுக் கொள்ள வேண்டும்' என சோனியாஜி கூறியுள்ளதைப் பற்றி?

! அப்பாடா! இவ்வளவு காலம் கழிச்சா வது இந்த அறிவுரையைச் சொன்னது தான் சொன்னார், காங்கிரஸ் ஆளாத மாநிலங்களுக்கும் சேர்த்துச் சொல்ல யிருக்கக் கூடாதோ!

● லலிதா செல்லப்பா, பம்மல்

? குற்றம் சாட்டப்பட்டவர்களை போலீஸார் அடிப்பதைத் தடை செய்து சட்டம் கொண்டுவர வேண்டாமா?

# ஜெ?

! சட்டம் ஏற்கெனவே இருக்கிறது. அதை மீறுவது காவல் துறையின் அதிகார மமதை. அடி உதையைக் காட்டிலும் மோசமான நிகழ்வுகளும் நடக்கின்றன. அரவாணி ஒருவர் திருட்டுக் குற்றம் சாட்டப்பெற்று, ஜாமீனில் வெளியாகி, காவல் நிலையத்துக்குத் தினமும் விசாரணைக்கு வரும்படி பணிக்கப்பட்டு, சித்திரவதை செய்யப்பட்டதில், பொறுக்க முடியாமல் ஸ்டேஷன் வாசலிலேயே மண்ணெண்ணெயை ஊற்றிக் கொண்டு... உயர்நீதிமன்றம் விசாரணைக்கு ஆணையிட்டுள்ளது.

● **எம்.ராஜேந்திரன், லால்குடி**

**? டிஸ்கவரி விண்கலத்தில் பறந்த சுனிதா வில்லியம்ஸ் தம்முடன் கீதை புத்தகம், விநாயகர் சிலை ஆகியவற்றை எடுத்துச் சென்றுள்ளாராமே?**

! ஆமென்!

● **உ.குணசீலபாண்டியன்**
**இராசபாளையம்** ❒

**? மாநில முதல்வர்கள், அமைச்சர்கள், எம்.எல்.ஏ.க்கள் மீது இலஞ்ச-ஊழல் வழக்குத் தொடர இனிமேல் ஆளுநர், சபாநாயகரின் முன் அனுமதி தேவையில்லை என்ற சுப்ரீம் கோர்ட் உத்தரவைப் பற்றி உங்கள் கருத்து..?**

! வெரி குட் நியூஸ். நெத்தியடியான இந்தத் தீர்ப்பு குறித்து பார்லிமெண்டில் விவாதிக்கப் போவதாக வெளியாகியுள்ள செய்தி ஈக்குவலி பேட் நியூஸ். நம் அரசியல்வாதிகள், 'தொடர்ந்து தப்பு செய்வோம்; ஆனால் யாரும் எங்களைத் தட்டிக் கேட்கக் கூடாது' என்ற ஒரு விஷயத்தில் கட்சி எல்லைகளைக் கடந்து ஒற்றுமையாகவும் தெளிவாகவும் இருக்கிறார்கள்.

● **எஸ்.எஸ்.மணி,**
**திருவனந்தபுரம் - 36** ✱

**? 'அணு ஒப்பந்தம் அமெரிக்க நாட்டுக்கு நாம் கொடுத்துள்ள அடிமை சாசனம்' என்பதாக ஜெயலலிதா அறிக்கைவிடத் தொடங்கிவிட்டாரே—தேசிய அரசியலில் அவர் இறங்கப்போவதற்கு இதெல்லாம் முன்னோட்டமா?**

! கருத்து சொல்ல சுதந்திரம் ஜெ.க்கும் உண்டு; திருவனந்தபுரம் எஸ்.எஸ். மணிக்கும் உண்டு. நிற்க, தேசிய கட்சிகள் பல வீனப்பட்டுப் போயிருக்கும் நிலையில் மாநில அரசியல், தேசிய அரசியல் என்ற பாகுபாடு தற்சமயம் குறைந்துகொண்டே வருகிறது.

• அரைகுறை அறிவுரை!



• வழித்துணை வாசிப்பு!



● **அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21**

**? பிறந்த நாள் விழாவில் கிரிக்கெட் வீரர் யுவராஜ் சிங் குடிபோதையில் அடி-தடி ரகளையில் ஈடுபட்டதைப் பற்றி...?**

! எப்பேர்ப்பட்ட வீரனையும் மது அடிமை கொள்ள வல்லது என்பதை உணர்த்துகிறது. உடல் வலிமையும் பயிற்சிகளும் மட்டுமே வீரம் அல்ல; தீமையைத் தொடக்கத்திலேயே எதிர்க்கும் மனோதிடம்தான் மெய்யான வீரம் என்பதை இச்சம்பவம் எடுத்துக் காட்டுகிறது. ●

❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:
உ.குணசீலபாண்டியன்,
10, தர்மாபுரம் தெரு, பசும்பொன்
தேவர் கலையரங்கம் அருகில்,
இராஜபாளையம் - 626 117

✱ ரூ.50/- பரிசு பெறுபவர்:
எஸ்.எஸ்.மணி,
T.C / 38 / 2923,
கிள்ளிப்பாலம்,
திருவனந்தபுரம் - 36

# எழுத்துலக

அமெரிக்காவைச் சேர்ந்த எல்.ஈ.வாட்டர்மேன் என்பவர் 1884-ஆம் ஆண்டு இங்க் போட்டு எழுதுகிற ஃபவுண்டென் பேனாவை வடிவமைத்தார். அந்தப் பேனாவால் எழுதுகிறபோது, இங்க் லீக் ஆகி, சில நேரங்களில் இங்க் ஓட்டம் தடைபட்டு, மக்கர் செய்யும். எனவே, பழுதடைந்த பேனாக்களை ரிப்பேர் செய்வதைப் பகுதி நேரத் தொழிலாகக் கொண்டிருந்தார், அமெரிக்காவில் விஸ்கான்சினைச் சேர்ந்த ஜார்ஜ் எஸ் பார்க்கர் என்ற ஆசிரியர். அவர்



தான் நான்கு வருட காலம் உழைத்து, பிரச்னைகள் இல்லாத புதிய, ஃபவுண்டென் பேனாவை உருவாக்கினார். பிறகு ஆசிரியர் வேலையினை விட்டுவிட்டு, 1892-ஆம் ஆண்டில் பார்க்கர் பேனா கம்பெனியை நிறுவினார்.

இன்று உலகின் இருநூறுக்கும் அதிகமான நாடுகளில் பார்க்கர் பேனாக்கள் விற்பனையாகின்றன; பார்க்கர் பேனாக்களின் விளம்பரங்கள் நாற்பத்திரண்டு உலக மொழிகளில் வெளியாகின்றன.

ஆனால் ஆரம்ப காலத்தில் ஃபவுண்டென் பேனா வியாபாரம் சுமாராகவே இருந்தது. முதல் உலகப் போர் ஆரம்பமானவுடன், கடிதப் போக்குவரத்து பலமடங்கு ஆகியது. உடனே பார்க்கர் இராணுவ வீரர்கள் பயன்படுத்துவதற்கென்றே பிரத்யேகமாக "டிரென்ச் பேனா" என்று ஒரு வகை பேனாவை உருவாக்கினார். திரவமாக இல்லாமல், இங்க் மாத்திரைகளைத் தயாரித்து, தேவையானபோது அந்த மாத்திரைகளைப் பேனாவுக்குள் போட்டு, சிறிது தண்ணீர் கலந்தால் இங்க் ரெடி!



இது எழுத்து உலகில் பெரியதொரு புரட்சியாகக் கருதப்பட்டது.

1921-ல், ஜார்ஜ் பார்க்கரின் இரண்டு மகன்களும் (ரஸ்சல், கென்னத்) அப்பாவுடன் பிசினசில் சேர்ந்து கொண்டார்கள். அப்போது பேனா என்றால் அது கறுப்பு நிறமாகத்தான் இருக்கும். ஆனால் பார்க்கர் அந்த மரபையும் உடைத்து, ஆரஞ்சு - சிவப்பில் பேனாக்களை உருவாக்கினார். அதற்குக் கிடைத்த வரவேற்பினைக் கண்ட அவர் தமது பேனாவை மட்டுமின்றி ஆரஞ்சு - சிவப்பு நிறத்தையும் சேர்த்துக் காப்புரிமை பதிவு செய்தார்! அடுத்தடுத்து, பல

நிறங்களில் பேனாக்கள் அறிமுகமாயின. சட்டைப் பாக்கெட்டில் செருகிக் கொள்ள வசதியாகக் கிளிப் பொருத்தப்பட்ட பேனா அறிமுகப்படுத்தப்பட்டபோது, 'நான் எழுதப் படிக்கத் தெரிந்தவன்' என்று பெருமையுடன் மற்றவர்களுக்குத் தெரிவிக்க, பார்க்கர் பேனாவைச் சட்டைப் பாக்கெட்டில் வைத்துக் கொண்டு போவது ஃபேஷனானது.

1945-ஆம் ஆண்டு பால் பாயிண்ட் பேனா அறிமுகமானபோது அதற்குக் கிடைத்த அமோக வரவேற்பு, ஃபவுண்டென் பேனா மார்க்கெட்டைப் பாதித்தது. "தண்ணீருக்குள்ளேயும் எழுதமுடியும்" என்று பால்பாயிண்ட் பேனா விளம்பரம் செய்யப்பட்டது. மடமடவென சுமார் இருநூற்று ஐம்பது நிறுவனங்கள் பால் பாயிண்ட் தயாரிப்பில் இறங்கி, மிரட்டின. ஆனாலும், பார்க்கர் நிறுவனம் மோசமாகப் பாதிக்கப்படவில்லை.

## சரித்திரம்!

மலிவு விலை பால் பாயிண்ட் பேனாக்கள் தயாரிப்பில் பெயர்பெற்று விளங்கிய "எவர் ஷார்ப்" பேனா கம்பெனியை வாங்கி, அதில் மலிவு விலை பால்பாயிண்ட் பேனாக்களை உற்பத்தி செய்து விற்பனை செய்து, உயர் தரமான பேனாக்களையே பார்க்கர் தயாரிக்கும் என்ற பெயரையும் தக்கவைத்துக் கொண்டது. பார்க்கர் பேனாக்களின் விலை உயர்வைப் பற்றி விமர்சனம் எழும்போதெல்லாம், "விலை அதிகம்தான். மறுக்கவில்லை; அது உயர்ந்த தரத்துக்காக மட்டும் தரப்படவில்லை; அதிக விலை கொடுத்து வாங்குகிறவர்கள், அந்தப் பேனாவுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்துப் பொக்கிஷமாகப் பாதுகாப்பார்கள்; அதுதான் எங்களுக்கு முக்கியம்" என்று பார்க்கர் நிறுவனம் சாமர்த்தியமாக பதிலளித்தது.

அறுபதுகளில், ஜார்ஜ் எஸ் பார்க்கரின் மூன்றாவது தலைமுறையைச் சேர்ந்தவர்கள் நிர்வகித்தபோது, பார்க்கர் பேனாக்களின் விற்பனை ஆண்டுக்கு நூற்றைம்பது மில்லியன் டாலரைத் தாண்டியது. பார்க்கர் தொழிற்சாலைகளில் ஆறாயிரம் தொழிலாளர்கள் வேலை செய்தார்கள்.

எழுத்தாளர் ஆர்த்தர் கொனான் டாயல், தமது உலகப் புகழ்பெற்ற ஷெர்லாக் ஹோம்ஸ் கதைகளை எழுதுவதற்குப் பார்க்கர் ஃபவுண்டென் பேனாக்களையே பயன்படுத்தினார். பிரபல இசை மேதைகள் பலர் தங்களுடைய இசைக் குறிப்புகளை எழுதுவதற்குப் பார்க்கர் பேனாக்களையே பயன்படுத்தினார்கள். 1987-ல், அமெரிக்க அதிபர் ரோனால்டு ரீகனும், ருஷ்ய அதிபர் கோர்பசேவும், பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்ட 'ஸ்டெர்லிங் சில்வர் பார்க்கர் 75' பேனாவால்தான் அணு ஆயுத ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார்கள்.

இப்படிப் பல சரித்திரப் புகழ் பெற்ற சம்பவங்களுடன் சம்பந்தப்பட்ட பார்க்கர் பேனா, இன்று எழுத்துலகில் சரித்திரம் படைத்துக் கொண்டிருக்கிறது.

எஸ்.சந்திரமௌளி

குளித்துவிட்டு ஈரத்துணியுடன் வெளியே வந்த சுதேசி சுப்பிரமணியம், பூஜையறையில் நுழைந்து விளக்கேற்றினார். சாப்பிட்டுவிட்டுப் புறப்பட்டார்.

"அப்பா, இன்னைக்கு ஞாயிற்றுக்கிழமை. இன்னைக்குக் கூடவா வெளியில போகணும்?" மகன் தமிழ்மணி தமது மனைவி சாவித்திரியிடம் காபி டம்ளரை வாங்கியபடியே கேட்டார்.

"வெள்ளைக்காரன் நமக்குச் செய்த துரோகத்துல ஒண்ணு வார விடுமுறை" என்றார் சுப்ரமணியம்.

"நடைமுறைக்கு ஒத்துவராத பிரசங் போறதில்ல. அதுவும் இல்லாமல், நீங்க வெளியில போயிட்டு வீட்டுக்குத் திரும்புற வரைக்கும் நானும் சாவித்திரியும் பதைபதைப்போடு, ஒவ்வொரு நிமிஷத்தையும் ஓட்ட வேண்டியதாய் இருக்குப்பா." கோபத்தை அடக்கியபடி கூறினார் தமிழ்மணி.

பதிலேதும் பேசாமல் அப்பார்ட்மெண்டின் இரண்டாவது தளத்திலிருந்து ஊன்றுகோல் துணையுடன் மெதுவாக இறங்கிச் சாலையில் நடக்கத் துவங்கினார் சுப்ரமணியம். கே.கே.நகர் சென்று தமது பிரசாரத்தைத் துவக்க நினைத்தவர், சட்டென்று மூடு மாறினார்.

பஸ் நிறுத்தத்துக்குச் சற்றுத் தள்ளி

# சுதந்திர தாகம்!

கத்தை ஆரம்பிச்சிட்டார். இனி அவ்வளவுதான்" என்று மனத்துக்குள் அழுது கொண்டதை வெளிக்காட்டாமல், தட்டை எடுத்து இட்லி பரிமாறினாள் சாவித்திரி.

"எந்த விடுமுறையையும் என் நாட்டு மக்கள் எடுத்துக்கிறது இல்லைன்னு சோனி கம்பெனி நிறுவனர் தமது சுயசரிதையில் எழுதி இருக்கிறார். அப்புறம் எப்படி அந்த நாடும் அதன் மக்களும் முன்னேறாமல் இருக்க முடியும்?"

"தனிப்பட்ட முறையில் நீங்க பண்ற சுதேசிப் பிரசாரத்தால இந்த நாட்டுக்கு எந்தப் பலனும் கிடைக்கப்



# சிறுகதை

யிருந்த வ.உ.சி. பூங்காவுக்குள் நுழைந்தார்.

அங்கு ஒரு வாலிபன் சிமெண்ட் பெஞ்சில் படுத்தவாறு படித்துக் கொண்டிருந்தான். பக்கத்தில் சென்றார்.

"சார், உக்கார்றீங்களா?"

எழுந்து அமர்ந்தவாறு கேட்டான் அந்த வாலிபன்.

புன்னகை செய்தவாறே தலையசைத்து,

"ரொம்ப நன்றி தம்பி. என்பேர் சுதேசி சுப்பிரமணியம். நீங்க?"



"சாகுல். பி.ஏ. தமிழ் இலக்கியம் தேர்டு இயர்."

"பட்டப்படிப்பு தமிழ்ல இருந்தாக்கூட ஆங்கிலம் எந்த அளவுக்கு நம்மள அறியாமலே நம்ம பேச்சிலே வருது பார்த்தீங்களா?"

வருத்தப்பட்டார்.

'அறுவை கேசுகிட்ட மாட்டிக்கிட்டோமோ? எப்படித் தப்பிப்பது?' சாகுல் யோசித்தான்.

"தம்பி, நீங்க நெனைச்சா கிராமத்து ஏழைக் குடும்பத்தோட ஒரு வாய் சோத்துக்கு வழிவகுக்க முடியும். செய்வீங்களா?"

கெஞ்சும் தோரணையில் கேட்டார். வாய்விட்டே சிரித்து விட்டான்.

"ஏன் தம்பி சிரிக்கிறீங்க? உங்களால் கண்டிப்பாக முடியும்!"

"இல்ல, பிறந்ததுல இருந்து இதுவரைக்கும் அஞ்சு காசு கூட சம்பாதிக்கல. இந்த நிலைமையிலே நான் எப்படி சார் மத்தவங்க சாப்பாட்டுக்கு வழி வகுக்க முடியும்?"

"முடியும் தம்பி; கண்டிப்பா உங்களால் முடியும். வருஷத்துக்கு ஒண்ணு ரெண்டு முறை உடுத்திக்க துணிமணி வாங்குவீங்க இல்லையா? அத கதர்த் துணியா வாங்கினீங்கன்னா, கிராமத்து ஏழை நெசவாளியோட ஒரு வேளை சாப்பாட்டுக்கு அது வழி வகுக்கும். அதே மாதிரி, பல்பொடி, சோப்பு, இத்யாதி, இத்யாதி. இன்னும் பலதரப்பட்ட மக்கள் பலனடைவாங்களே!"

"இப்ப நான் உபயோகிக்கிற பொருளால மத்தவங்க லாபம் அடையலேங்கறீங்களா?"

"அந்த அர்த்தத்துல நான் சொல்ல வரல. நம்ம நாட்டுப் பொருட்களைக் கொண்டு, நம்ம முதலீட்டுலேயே, நம்ம மக்களால் தயாரிக்கிற பொருட்களை வாங்கினா, நம்ம பொருளாதாரம் உயரும் இல்லையா?

"பெரும்பாலும் இந்தியர்கள் எல்லோரும் இந்தியப் பொருட்களைத் தானே வாங்குறாங்க!"

"அங்கதான் எல்லோரும் தப்பு பண்றாங்க. இந்தியாவுல செய்ற பொருட்களெல்லாம் இந்தியப் பொருட்கள் ஆயிடாது. உலகத்துல இருக்கிற பெரிய தொழி

ஸ்ரீரங்கம் பி. ஸ்ரீகாந்தன்

லதிபர்கள் எல்லோரும் சில கோடிகளை இந்தியாவுல முதலீடா போட்டுப் பல கோடிகளை அள்ளிக்கிட்டு இருக்காங்க."

"நீங்க கம்யூனிஸ்ட்டா?"

"நான் ஓர் இந்தியன்."

"பொழுது போக்குக்காக இந்தக் காரியத்தப் பண்றீங்களா?"

"இல்லைப்பா, பதினைந்து வருஷத்துக்கு முன்னாடி ஒரு நடுநிலைப் பள்ளியிலே தலைமை ஆசிரியரா இருந்து ஓய்வு பெற்றேன். அன்னைலேர்ந்து இந்தச் சுதேசிப் பிரசாரம்."

"இன்றைய விஞ்ஞான உலகத்துல



**"இந்த ஆட்டத்திலும் அந்த பாட்ஸ்மேனுக்குக் காயமாம்!"**

**"அப்படியா! அவருக்கு இது எத்தனையாவது இஞ்சுரி?"**

**- லீலாஜி**





உங்களுடைய இந்த சுதேசிப் பிரசாரம் வீணுன்னுதான் எனக்குத் தோணுது."

"சொல்றேன்னு கோவிச்சிக்காதீங்க தம்பி, உங்க தாய் ஒரு நோயால பாதிக்கப்பட்டு, உயிர் கொஞ்சம் கொஞ்சமா சுருங்கிக்கிட்டு இருக்கிறத பார்த்துக்கிட்டு எப்படி சும்மா இருக்க முடியாதோ, அதே மாதிரிதான் நம்மளோட இந்தத் தாய் நாடும். அன்னிய மோகம்ங்கிற நோயால கொஞ்சம் கொஞ்சமா செத்துக்கிட்டு இருக்கு. நாம எல்லோரும் மனசு வச்சா கட்டாயமா தாய்நாட்டைக் காப்பாத்த மு....டி.....யு.....ம்."

சுப்ரமணியத்துக்கு வார்த்தை குழறியது. இரு கைகளாலும் தலையைப் பிடித்தபடி சிமெண்ட் பெஞ்சில் சாய்ந்தார்.

திடுக்கிட்ட சாகுல், "சார், சார்" என்று அலறினான். பெரியவர் முழுமையாகச் சுயநினைவை இழந்திருந்தார்.

மருத்துவமனை வராண்டாவில் நின்றிருந்த சாகுலின் இரு கைகளையும் பிடித்து, "ரொம்ப தேங்க்ஸ் சார், சரியான நேரத்துல எங்க அப்பாவோட உயிரைக் காப்பாத்தினதுக்கு" என்றார் தமிழ்மணி.

"அதெல்லாம் இருக்கட்டும் சார், டாக்டர் என்ன சொன்னார்?"

"பயப்படும்படியா ஒண்ணுமில்ல. 'லோபிரஷர்'னால மயக்கம், அவ்வளவுதான்!"

"ஏங்க, மாமாவுக்கு மயக்கம் தெளிஞ்சிருச்சு, வர்றீங்களா?"

சாவித்திரி அறை வாசலில் நின்று குரல் கொடுத்தாள். தமிழ்மணியும், சாகுலும் அறைக்குள் நுழைந்தார்கள்.

சாகுலைப் பார்த்து சுப்ரமணியம் இரு கை எடுத்து வணங்கி, "உன்னுடைய மனிதாபிமானத்துக்கு ரொம்ப நன்றிப்பா. நான் குணமாயிட்டேன். இருந்தாலும் என்னுடைய உடம்புல இருக்கிறது ஆங்கில மருந்துங்கிறத நினைக்கையில் சாக்கடையில் விழுந்து எழுந்திரிச்ச மாதிரி ஒருவித அருவருப்பு மனசுக்குள்ள. வேண்டாம்; எனக்கு இந்த ஆங்கில முறை வைத்தியம் வேண்டாம்."

கட்டிலை விட்டு எழுந்து, ஊன்றுகோலைத் தேடிக் கண்டுபிடித்து எடுத்துக் கொண்டு, அறையைவிட்டு வெளியேறினார்.

அவருடைய செயலைத் தடுக்க மனமில்லாமல், ஆட்டோ பிடித்து, சாவித்திரி துணையுடன் தந்தையை வீட்டுக்கு அனுப்பிவிட்டு, பக்கத்திலிருந்த கடைக்காரரிடம்,

"ரெண்டு கூல்டிரிங்ஸ் கொடுங்க" என்றார் தமிழ்மணி.

"வேண்டாம் சார்; இளநீர் சாப்பிடுவோமே!" என்றான் சாகுல். ●

இயக்குநர் விஜய் பிரபாகரனின் பார்வையில் தாய்ப் பாசத்தைக் காட்டும் கருவறையின் கதை எப்படி இருக்கும் என்பதை ஆவலுடன் எதிர்பார்க்க வைக்கின்றன - அந்த மூன்று நிலைப் புகைப்படங்கள்!
**சென்னை - 87, பா.கண்ணன்**

# பத்தும் முத்து!



பள்ளி மாணவர்கள் பலியாவதைத் தடுக்க தாங்கள் கூறியுள்ள பத்துத் தீர்மானங்களும் முத்தானவை. பின்பற்றினால் பலன் நிச்சயம் உண்டு.
**சென்னை - 17, கோமளா ரங்கநாதன்**

'நமது ராணுவ வீரர்களைக் கொன்று குவித்த முஷாரஃப்புக்கு வரவேற்பு தரும்போது, இலங்கையில் வாழும் நம் தமிழ் மக்களுக்கு அமைதியான, வாழ்க்கை முறையை ஏற்படுத்த நாம் ஏன் தலையிடக் கூடாது?' என்ற ஸ்ரீஸ்ரீரவிசங்கரின் கருத்து வொண்டர்ஃபுல்!
**சென்னை - 17, ஜி.குப்புசாமி**

பொம்மைகள் உஷார் என்ற எச்சரிக்கைக் கட்டுரை அதிர்ச்சியடைய வைத்தது.
**பள்ளப்பட்டி, த.அசாருதீன்**

தமிழ்க்கடவுள் முருகனின் சிறப்பு, அமரர் கல்கியின் எழுத்தின் சிறப்பை வெளிப்படுத்திய விழா பாராட்டுக்குரியது.
**திருவண்ணாமலை, என்.சண்முகம்**

'சாமி' கெட்-அப்பில் விஷால் படத்தைப் போட்டிருப்பது புருவங்களை விரிய வைத்தது.
**மேலகிருஷ்ணன்புதூர் கே.எல்.கந்தரூபி**

'கடுகடுத்த வைகோ கை குலுக்கிய ஜெ' தலைப்பைப் பார்த்ததும் 'ஆஹா... ஆரம்பிச்சிட்டாங்க' என ஆர்வமாகப் பக்கங்களைப் புரட்டி, உண்மை அறிந்து 'ஙே' என விழித்தேன்.
**பொன்மலை, ஆர்.பிரகாஷ்**

'நியாயத்துக்கும் வாசம் உண்டு' என்ற உமாகல்யாணியின் சிறுகதை அற்புதம்!
**சென்னை - 61, எஸ்.கோபாலன்**

'இருவர் மட்டும்' திரைப்பட விமரிசனத்தில் வித்தியாசமான முயற்சி மட்டுமே வெற்றி தராது என்று உணர்த்திய விதம் நச்!
**அயன்புரம், த.சத்தியநாராயணன்**

# நம்பிச் சென்ற பாலசிங்கம்!

“எனக்குப் பக்க பலமாக இருந்து செயல்பட்ட ஒளிவிளக்கு இன்று அணைந்து விட்டது. அவரது மறைவு எனக்கு மட்டு மல்ல; தமிழீழ தேசத்துக்கே பேரிழப்பு” என்று உணர்ச்சிவசப்பட்டுப் பேசியிருக் கிறார் விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரன்.



• மனைவியுடன்...

கார்ட்டூனிஸ்ட் சுந்தர் ஆதரவில் வீரகேசரி பத்திரிகை யில் மொழி பெயர்ப் பாளராகப் பணியைத் துவங்கிய பாலசிங் கம், இந்திய வேதாந்தங்களையும், புத்தரது உபதேசங்களையும் ஆழ்ந்து படித்தவர்.

அடுத்து, பிரிட்டிஷ் தூதரகத்தில் மொழி பெயர்ப்பாளராக நியமிக்கப்பட்டார். அப்போது ஒரு தமிழ்ப் பெண்ணைக் காதலித்து மணந்து கொண்டார். அவர் நோய்வாய்ப்பட்டு இறந்து விடவே, அடுத்து, ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த அட்லீனைக் காதலித்துத் திருமணம் செய்தார்.

1998ல் ஸ்ரீலங்காவில் இருந்த பாலசிங்கம் நீரிழிவு நோய் சிகிச்சைக்காக அயல்நாட்டுக் குச் செல்ல வேண்டியிருந்தது. ஆனால், ஸ்ரீலங்கா அரசு அதற்கு முட்டுக்கட்டையாக இருந்தது. அப்போது பிரபாகரன், மனிதாபி மான அடிப்படையில் உதவக்கோரி சந்திரிகா குமாரதுங்காவுக்கு வேண்டுகோள் விடுத்ததுடன், புலிகளால் சிறைப்பிடிக்கப் பட்டிருந்த ஒன்பது ராணுவத்தினரையும் நல்லெண்ண நடவடிக்கையாக விடுதலை செய்தார். அப்படியும் எதிர்பார்த்த பலன் கிட்டவில்லை. ரகசியமாக பாலசிங்கத்தை யும், அவரது மனைவியையும் கடற்புலி களின் தலைவரான சூசை, தாமே விசைப் படகை ஓட்டிச்சென்று நடுக்கடலில் காத்திருந்த புலிகளின் கப்பலில் ஏற்றி விட்டார். அங்கிருந்து தாய்லாந்துக்குச் சென்று, பின் பாங்காக்கில் ஒரு மருத்துவ மனையில் அவசர சிகிச்சை பெற்று, பிறகு சிங்கப்பூர் வழியாக லண்டன் சென்றடைந் தார்கள்.



2002ஆம் ஆண்டு ஸ்ரீலங்கா அரசுக்கும், விடுதலைப் புலிகளுக்கும் இடையில் நார்வே பேச்சுவார்த்தை துவங்கியபோது, பால சிங்கத்தின் பங்கு முக்கியத்துவம் வாய்ந்த தாக இருந்ததை உலகமே அறியும்.

“பேச்சுவார்த்தை மூலமாக ஈழத் தமிழர் பிரச்னைக்குத் தீர்வு காண முடியும் என்று அவர் திடமாக நம்பினார். நான் சந்தித்து ஒரு வார காலத்தில் அவர் மறைந்து விட் டார்” என்கிறார் நார்வே தூதுக் குழுவில் இடம்பெற்றிருந்த எரிக் சோல்ஹெம்.

**- கௌதம் ராம்**



# திருத்தியமைக்கப்பட்ட தேசிய காசநோய் தடுப்புத் திட்டம், தமிழ்நாடு




## காசநோயாளிகளே விழித்துக்கொள்ளுங்கள்!

காச நோய்க்கான அறிகுறிகள் :



3 வாரங்களுக்கு மேல் தொடர்ந்து இருமல்



மாலை நேரக் காய்ச்சல்



எடை குறைதல்



பசியின்மை



நெஞ்சு வலி



நேரடி குறுகிய கால சிகிச்சை (DOTS) முறை : காச நோயைக் குணப்படுத்த சிறந்த வழி (காச நோயைக் கட்டுப்படுத்தும் தேசியத் திட்டம்).

## எச்சரிக்கை

- தொடர் இருமலா, நெஞ்சு வலியா?
- திடீர் எடை குறைதலா, பசியின்மையா?
- காய்ச்சலா, சளியில் இரத்தமா?

**காசநோயாக இருக்கலாம் - கவலை வேண்டாம்.**
**காசநோயை முழுமையாக குணப்படுத்த முடியும்.**

- காசநோய்க்கான பரிசோதனைகள், மருந்துகள் **இலவசமாக** அனைத்து துணை சுகாதார மையங்களிலும், ஆரம்ப சுகாதார மையங்களிலும், அரசாங்க மருத்துவமனைகளிலும் கிடைக்கும்.
- காசநோயாளிகள் மருத்துவமனையில் உள் நோயாளிகளாக சிகிச்சை பெற வேண்டிய அவசியம் இல்லை.
- வீட்டிலிருந்தபடியே DOTS – (குறுகிய கால நேரடி சிகிச்சை) முறையால் மட்டுமே ஆறு முதல் எட்டு மாதங்களுக்குள் காசநோயை கட்டுப்படுத்த முடியும். நோயாளிகளின் வீட்டிற்கு அருகாமையிலேயே மருந்துகள் பெற வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

**காசநோயற்ற சமுதாயத்தை நோக்கி விறு நடை போட உதவுங்கள்!**

பொது நலன் கருதி வெளியிடுவோர்:

மாநில காசநோய் தடுப்புச் சங்கம், சென்னை-600 006.

Visit us at: www.tn.gov.in / www.southindia.com

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.



The Chennai Silks Group
Since 1962

ஸ்ரீ குமரன் தங்கமாளிகையின்

# எக்ஸ்சேஞ்ச் ஃபெஸ்ட் 2007

ஜனவரி 10 வரை

## மனசுக்கு பிடிக்காத பழைய நகை பழைய டிசைன் இன்னும் எதற்கு?

உங்களது அனைத்து பழைய நகைகளையும் புத்தம் புதியதாய், தூய்மையான 916 தரத்தில் அழகழகான டிசைன்களாக மாற்றி புத்தாண்டை ஸ்ரீ குமரன் தங்க நகைகளோடு கொண்டாடி மகிழுங்கள்.

ரொக்க கொள்முதலுக்கு
அழகிய பரிசுகள்

கார் பார்க்கிங் வசதி
கிரெடிட் கார்டு வசதி
ஞாயிறு விற்பனை உண்டு



**ஸ்ரீ குமரன்**
**தங்கமாளிகை**

பெரும் தங்க நகை மாளிகை

கோயமுத்தூர் © 2399888 • திருப்பூர் © 2247754 • ஈரோடு © 2213277 • திருச்சி © 2717888